# முரசொலி

வார இதழ் — மு. கருணாநிதி

முரசு 2 | 16—3—56 | வெள்ளி | ஒலி 50


## தாயமை

கருணாநிதி

செல்லப்பன்

"சரசத்தாலும் சாகசத்தாலும் எப்படியோ அரசியின்மீது அரசனுக்கு இருந்த அன்பை அழித்துவிட்டேன். அரசனது இருதயத்திலே அழியாத சித்திரமாக அமர்ந்திருந்தாள் அந்தக் கோப் பெருந்தேவி. அந்தக் கலையாத ஓவியத்தைக் கரிகொண்டு மெழுகிவிட்டேன்.

"மன்னனின் மன மாளிகையில் ஜோதி விளக்கு அவள், ஒரு காலத்தில்! அந்த ஜோதி விளக்கு இன்று வீதியிலே வீசப்பட்டுவிட்டது. தோழிகள் புடை சூழ— தோகை மயில்கள் ஆடும் நந்தவனத்தில் மலரால் நடைபாதை அமைத்து, அவளும் அரசரும் ஆனந்த பவனிகள் நடத்தினரே— அது அந்தக் காலம்.

"இப்போது வேந்தரின் இருதயத்தில் இந்த சுழற்கண்ணியின் சுந்தர ரூபம் பூஜை அறைப் படம் போல ஜோடித்து வைக்கப்பட்டிருக்கிறது. வேந்தரின் மடியும், மலைத் தோளும் அவளுக்குச் சொந்தம் ஒருகாலத்தில்! இன்றோ என் சொல்லுக்குச் சுழலும் "மாயப் பதுமை"யாகி விட்டார், மணிமுடி வீரர்! இது எனக்கு வெற்றிதான் — ஆனாலும் என் மனம் அமைதியடையவில்லை. அரசரின் பாசத்தையும் நேசத்தையும் இழந்தாள் எனினும் பட்டத்து ராணி என்ற மதிப்பை இழந்தாள் இல்லை. அவளது மகன் தான் கிரீடத்துக்குச் சொந்தக்காரன் என்ற பாத்யதையைப் பறி கொடுத்தாள் இல்லை.

"இந்த நிலையில் எனக்கு நிம்மதி ஏது மைத்துனரே! ஊரெல்லாம் அவள் பக்கம் அனுதாபம் காட்டுகிறது. அரசரும் அவளும் பிரிந்திருப்பது நாட்டுக்கு ஏற்பட்ட எதிர்பாராத கேடு என்று புலம்புகிறது மக்கள் மன்றம். என்னுடைய குணுதிசியங்களைக் கொற்றவன் சரியாகப் புரிந்துகொள்ளவில்லை; அதனால் என் வலையில் வீழ்ந்துவிட்டார் — என்று மந்திரிகளின் குழு மாரடித்து அழுதுகொண்டிருக்கிறது. இளைய ராணி நான்— என்கிற மதிப்பைக்கூடத் தர மறுக்கிறது அரண்மனை வட்டாரம்.

★ தொடர்ச்சி 6-ம் பக்கம்

நமது தாழ்வாரத்தில் நாம்! (பக்கம்-5)

# விருதுநகரார் ‘வீராவேசம்’!

விருதுநகர் வீரர், பழுது நிறைப் பண்பால் சந்தர்ப்பவாதக் கழுதகளின் அலகினிடை அகப்பட்டுத் தவிக்கும் மாநிலத்து முதலமைச்சர் கடைசியாக வாயைத் திறந்திருக்கிறார்!

பீர்மேடு, தேவிகுளம் — எப்படியும் நம் பிடியைவிட்டுப் போகாது என்று பொங்கிவரும் கடல் போலக் கொந்தளித்து நிற்கும் நாட்டு மக்களுக்கு உறுதியளித்தாரா? இல்லை!

பிப்ரவரி 20-ந் தேதியை போராட்டத்தின் துவக்கமாகக் கொண்டு துவண்டுபோன இதயத்தை ஆட்சி பீடத்துக்கு உணர்த்திக் காட்டிய சர்வகட்சிக் கூட்டணி நண்பர்களே! உங்களுக்கெல்லாம் உறுதியளிக்கிறேன்; உங்கள் குரலை டில்லிக்கு அறிவித்து, ஆவன செய்கிறேன்!

—என்றாவது அறிவித்து நமக்கு ஆறுதல் தந்தாரா? அதுவும் இல்லை.

—எப்படிச் சொல்வார் இப்படி? அவர் என்ன அரசியல் நெறி பயின்று, ஜனநாயகப் பண்பு எது? இட்லரிசப் பண்பு எது? — என்று பகுத்துணரும் பான்மை பெற்றவரா?

ஏகாதிபத்யப் பாசறையில் நுழைந்து, பழைய வெள்ளைக்காரன் தர்பாரை திருப்பி நடத்திக்கொண்டிருக்கும் திருக்கூட்டத்தைச் சேர்ந்தவர்தானே? எப்படி அவரிடம் கண்யத்தை எதிர்பார்க்க முடியும்?

எனவேதான் பேசினாராம், பேசினாராம், சுமார் நாற்பது நிமிஷங்கள் சர்வகட்சிக் கூட்டணியைப் பற்றியே பேசித் தீர்த்தாராம்!

ஆவடி மாநாட்டின்போது எண்ணி மூன்று வார்த்தைகளைப் பேசியவர் மார்ச் எட்டாந் தேதியன்று நாற்பது நிமிஷங்கள், தன்னுடைய வாயைப் பீரங்கிக் குழலென்று நினைத்துக்கொண்டு, கூட்டணியின் மீதும், குறிப்பாக கூட்டணியை அணி செய்யும் திராவிட முன்னேற்றக் கழகத்தின் மீதும் வார்த்தை வெடிகுண்டுகளை வீசித்தள்ளியிருக்கிறார்!

சென்னையில் ஆர்ப்பாட்டங்களுக்கு ஏற்பாடு செய்தவர்கள் இந்தியாவின் இதர பாகங்களிலிருந்து பிரிந்து போக வேண்டுமென்ற நோக்கத்துடனேயே அவற்றைச் செய்தார்கள்-என்று சமீபத்தில் பிரதம மந்திரி பார்லிமெண்டில் கூறியதற்கு சர்வ கட்சி செயல் கமிட்டித் தலைவர் ஒருவர் இந்திய யூனியனிலிருந்து பிரிந்து போக நாங்கள் உத்தேசிக்கவில்லை என்று பதில் கூறியுள்ளார். ஆனால், அவர் அப்படிசொன்னாரே யொழிய உண்மையில் பிரிந்து போக வேண்டும் என்ற எண்ணம்தான் அவர்களில் சிலருக்கு இருக்கிறது.

இதை வெட்ட வெளிச்சமாகவும் பகிரங்கமாகவும் சொல்லுவதற்கு அவர்கள் பயப்படுகிறார்கள், வெட்கப்படுகிறார்கள்.

—அருமையான கண்டுபிடிப்பு!

ஆர்க்கிமிடிஸ் தன்னுடைய ஆராய்ச்சி வெற்றி பெற்றதும், தான் நிர்வாணமாய் இருப்பதைக் கூட உணராமல், "வெற்றி! வெற்றி!!"-எனக்கூவிக்கொண்டு சந்தை வெளிகளில் சுற்றிக் கொண்டிருந்ததைப் போல, காமராசர் அன்றையதினம் தனது ஆட்சிக் கேற்பட்ட நிர்வாணக் கோலத்தைக் கண்டு கூச்சப்படாமல் ஏதோ வெறி பிடித்தவர் போல — இருக்கின்ற இடத்தையும், பேசுகின்ற மேடையையும் மறந்து விட்டுப் பேசியிருக்கிறார்!

—காமராசர் இந்தக் கருத்துக்களைச் சட்ட சபையிலே பேசியிருந்தால் சந்தோஷப் பட்டிருப்போம், இடம் தெரிந்து பேசுகிறாரே என்று!

மரீனா கடற்கரையில் கூட்டம் அமைத்து, சர்வகட்சிக் கூட்டணிக்காரர் ஒருவரையும் வாதுக்கழைத்திருந்தால் விருதுநகரத்தாரை வீரர் என்று நம்பி யிருப்போம்!

பாவம்; அவர் கல்லூரியில் அல்லவோ கட்சி அரசியல் பேசி இருக்கிறார்; கருவாட்டுக் கடைத் தெருவில் பட்ஜெட் பிரசங்கம் புரிவதைப் போல!

முதல் நாள் வந்த பத்திரிகைச் செய்தியில் சர்வ கட்சிக் கூட்டணியின் நோக்கமே தமிழகத்தை இந்திய யூனியனிலிருந்து பிரிப்பதுதான் என முழக்க மிட்டதாக செய்தி வெளி வந்திருந்தது.

மறுநாளே காமராசர் அறிவித்து விட்டார், ஒரு சிறு மாற்றத்தை; அவருடைய திருத்தத்தின்படி சர்வகட்சிக் கூட்டணியின் சிலருக்கு அப்படியொரு எண்ண முண்டாம் — தமிழகத்தைப் பிரிக்க வேண்டுமென்று!

தவறு காமராசரே! தவறு! கூட்டணியில் சிலருக்கு—எங்களுக்கு தமிழ் நாட்டைப் பிரிக்கும் நோக்கம் கிடையாது, திராவிட நாட்டைப் பிரிக்கும் நோக்கம்தான் இலட்சிய நிலவாகப் பூத்திருக்கிறது!

—இதில் திரைபோட என்ன இருக்கிறது!

சர்வ கட்சித் தோழர்களிடம் நாங்கள் கைலாகு கொடுத்த போது திராவிடநாட்டுப் பிரிவினைத் திட்டத்தைக் கைகழுவி விட்டா போர்க் கீதம் பாடினோம்?

பாவம்; காமராசர் யார் போலவோ நம்மை எண்ணிக் கொண்டு தப்புக் கணக்குப்போட்டிருக்கிறார்!

பிரச்னை பொதுவாக இருக்கிறது. பீர்மேடு, தேவிகுளம் நமதாக வேண்டுமென்ற கருத்து எல்லோருக்கும் அரும்பு வடிவில் இருந்தது. அந்த அரும்பு ஐக்ய முன்னணி என்ற பெயரிலே பூக்க ஆரம்பித்து மணம் வீசத் துவங்கியிருக்கிறது.

இதிலே என்ன தவறு கண்டு விட்டார் காமராசர்?

"ரயிலை நிறுத்துவது, குழப்பமுண்டாக்குவது, சில நாட்களுக்கு ஜெயிலுக்குப் போவது— இவையெல்லாம் பெரிய போராட்டமாகி விட்டது!"

—இதுவும் அவர் வாசகம்தான்!

வயதேறிய கிழவர்கள் கோலியடிக்கும் சிறுவனைப் பார்த்து 'இது சிறுபிள்ளைத் தனம்!' என்று இறுமாப்போடு பேசுவதைப் போலவே வார்த்தைகளை உதிர்த்திருக்கிறார், விருதுநகரத்தார்!

1916-ம் ஆண்டு ஏப்ரல் மாதம் 6-ந் தேதியன்று ரௌலட் சட்டத்தைக் கண்டிக்கு முகத்தான் பட்டி தொட்டிகளெங்கும் அர்த்தால் அனுஷ்டிக்கப்பட வேண்டுமென்று கோரிக்கை எழுப்பிய கட்சியைச் சேர்ந்தவர்தான்இன்று இப்படிக் கூக்குரல் போடுகிறார்!

சட்டமறுப்பு இயக்கம்.
சைமன் கமிஷன் பகிஷ்காரம்.
உப்பு சத்தியாக்கிரகம்.
கள்ளுக்கடை மறியல்.
உண்ணா விரதம்.

—இப்படிப் பல போராட்டங்களை நடத்தி இலட்சியம் நிறைவேறப் பெற்றவர்கள் இன்று இறுமாப்போடு கேட்கிறார்கள், "இது ஒரு போராட்டமா?" என்று!

காமராசரே! வேறு எதுதான் உமது கண்களுக்குப் போராட்டமாகத் தெரிகிறது?

★ தொடர்ச்சி 10-ம் பக்கம்

## அமெரிக்க விவகாரம்!

★★ சென்ற சில மாதங்களாக இருதய நோயால் பாதிக்கப்பட்டிருந்து, நாட்டின் தலைவராக இருந்து பணி புரியும் வாய்ப்பு இனி கிடைக்குமோ கிடைக்காதோ என்ற நிலையைப் பெற்றிருந்த அமெரிக்க ஜனாதிபதி ஐசன்ஹோவர் இப்போது டாக்டர்களால் காப்பாற்றப்பட்டு விட்டார்.

★ அடுத்த பொதுத் தேர்தலிலே ஜனாதிபதி பதவிக்கு அவர் மீண்டும் போட்டியிடுவாராம், குடியரசுக் கட்சியின் சார்பாக!

★★ குடியரசுக் கட்சி தலைவர்களுக்குப் பஞ்சம் கொண்ட பிற்போக்காளரின் பிரதி பிம்பம்!

★ ஐசன்ஹோவர் அங்கம் வகிக்கிற ஒரே காரணத்தால் தான் அந்தக் கட்சி பெருமைப்பட முடிகிறது!

உதவி ஜனாதிபதி நிக்சன் கூறியதைப்போல, குடியரசுக் கட்சிக்கு ஒரு தலைவர் கிடையாது; ஐசன்ஹோவரைத் தத்தெடுத்துக் கொண்டுதான் கட்சி இயங்க முடிகிறது!

★★ இருந்தாலும் அவர்களுக்கு வேறு வழி கிடையாது!

★ டல்லஸ் யுத்த வெறியர்! மற்றவர்களோ பிற்போக்கு வாதிகள்!

'ஐக்' ஒருவர்தான் நாட்டு மக்களிடையே செல்வாக்குப் பெற்றிருப்பவர்!

★★ இந்த நிலையில் ஜனநாயகக் கட்சியின் சார்பாக அட்லாய் ஸ்டீவன்சனுக்கும், 'ஐக்'கிற்கும் தேர்தல் யுத்தம் துவங்க இருக்கிறது!

★★★ அமெரிக்காவின் அரசியல் சட்டப்படி ஜனாதிபதி தன்னுடைய பதவிக்காலத்தில் மரித்து விட்டாலோ, பணியாற்ற முடியாத அளவுக்கு உடல நலம் பாதிக்கப் பட்டாலோ, அந்த ஸ்தானத்துக்கு மறு தேர்தல் நடத்த முடியாது!

★ உடன் உதவி ஜனாதிபதியே ஜனாதிபதியாகி விடுவார்.

★★ எனவே வயதேறிய ஐசன்ஹோவர் மறுபடியும் தேர்ந்தெடுக்கப்பட்டு, அப்போது மீண்டும் இருதய நோயால் தாக்கப்பட்டு, ஏதாவது விபத்து நேரிடுமானால் உதவி ஜனாதிபதிதான் ஆட்சிச் சக்கரத்தை உருட்ட நேரும்! இது ஐக்கிற்காக ஓட்டளிக்கும் பொதுமக்களால் விரும்பத் தகாத நிலைமை அல்லவா?

★★ இப்படித்தான் அமெரிக்காவிலே எதிர்க்கட்சிக் காரர்கள் பிரச்சாரம் செய்து வருகிறார்கள்!

★★ இருப்பவர் ஒரு தலைவர்; அவரும் போய் விட்டால் கட்சி எப்படி உருப்படும் என்று கவலையாம், குடியரசுக் கட்சியினருக்கு!

—இந்த நிலையில் அமெரிக்கப் பொது மக்கள் என்ன முடிவு கூறப்போகின்றனரோ?





# தலையங்கம்

காதலிலே கவிதையிலே களம் போதும் பேச்சு;
கணவனுக்கும் மனைவிக்கும் திராவிடமே மூச்சு!

சென்னை 16--3--56 வெள்ளி

## தருணம் இதே!

எமை நத்துவாய் என எதிரிகள் கோடி இட்டழைத்தாலும் தொடேன்!—என துரோகத்தைக் காறி உமிழ்ந்துவிட்டு, காதலியர் முகத்தையும், காராக்கிரக வாழ்க்கையையும் மாறி மாறிப் பார்க்கும் இலட்சிய வீரர்களை இலட்சத்துக்குமேல் பெற்றிருக்கும் திராவிட முன்னேற்றக் கழகம் மாற்றாரும் வேற்றாரும் கண்டு மலைக்குமளவுக்கு வளர்ந்திருக்கும் வீரர் கோட்டம்!

தோடை நடுங்கும் தோழர்களைத் தள்ளி நில்—என்று கூறிவிட்டு படை முகப்பில் பாய்ந்துவரும் ஈட்டிகளுக்குப் பதில் சொல்லக் காத்திருக்கும் பாடிவீடு!

இலட்சியபுரி நோக்கிப் புறப்பட்டிருக்கும் பயணம் என்ன சாமான்யமான காரியமா? ஜில்லிட்ட பிணம்போல உலவும் மரத்துப் போன மனித உள்ளங்களின் மயக்கம் போக்கி, தயக்கம் ஏன் தோழனே; தாய்நாடு காக்கத் துள்ளி எழு—என்று சங்கநாதம் எழுப்ப வேண்டும்!

ஏசல் கணைகள் — இழி மொழியாம் ஈட்டிகள் — எட்டுத் திக்கிலிருந்தும் சுழற்றப்படும்!

—விடுதலை வீரன் இத்தகைய இழிகுணச் செயல்களைத் தாங்கும் வைர நெஞ்சனாக மாறவேண்டியிருக்கிறது!

—நாமும் தி. மு. க. வாக மாறி, தனிக்குடித்தனம் துவங்கி ஆறு ஆண்டுகள் உருண்டு விட்டன! ஏறு நடை நடந்து வந்திருக்கிறோம், இலட்சியப் பாதையிலே! கானாறுகளைக் கடந்திருக்கிறோம், கடமை, கண்யம், கட்டுப்பாட்டைக் கருத்திலே கொண்டு!

ஆலையரசுகள்; ஜரிகைத் தொப்பிகள் நம்மிடையே இல்லை!

வெள்ளிப் பணம் என்று வாய் திறந்ததும், இந்தா அள்ளிக்கொள் — என்று இரும்புப் பெட்டியைத் திறந்துவிடும் பணப் பெருச்சாளிகள் நம் அருகில்கூட வந்தது கிடையாது!

இருந்தும் நமக்கென சில சொத்துக்களைவைத்திருக்கிறோம்.

அறிவகம்—ராயபுரம் கடற்கரையைப் பார்த்துக் கொண்டு கடல் கொண்ட தென்முகப்பை நம் சிந்தைக்குக் கொண்டு வரும் விதத்தில் கம்பீரமாகக் காட்சியளிக்கிறது!

'நம் நாடு' அச்சகம்—நமது இலட்சியப் பேரேட்டை தினம் தினம் தந்து கொண்டிருக்கிறது!

இப்போது —நுங்கம்பாக்கத்திலே ஒரு அழகிய மைதானம்,— நாம் தவழ்ந்த விளையாட; தாழ்ந்து போன சமுதாயத்தைத் தூக்கி நிறுத்தி, சத்துள்ள கருத்துக்களை மக்கள் மன்றத்துக்கு எடுத்து வைக்க!

—இத்தனையும் செந்நீரை வியர்வை நீராய்ச் சொட்டவிடும் பாட்டாளித் தோழர்கள் தந்தது; ஏழையர் இயக்கத்துக்காக ஏழையர் கொடுத்தது!

தன்வீடு, தன் பெண்டு, பிள்ளை, சம்பாத்யம்—என வாழ்க்கைத் தோணியை நகற்றிக் கொண்டிருப்போர் ஏராளமாக வாழும் இந்த நாட்டிலே, இலட்சியத்துக்கு மதிப்பளிக்கும் பெரியவர்களும் இருக்கிறார்கள்—என்று எண்ணும்போது நம் இதயம் விரிகிறது; முகம் மலர்கிறது—மகிழ்ச்சியால்; வியப்பால்!

திராவிடனாய்ப் பிறந்தவன் ஒவ்வொருவனும் இந்த அணிவகுப்பிலே பங்கு பெறுவதை தங்கு தடையின்றி தாயகத்தில் வந்து புகுந்த வாயிலில் தடை போட்டு நிறுத்துவதைப் பெருமைக்குரிய பணியாகக் கருதுகிறான்!

வரலாறு செய்கிறோம்; வாலறுந்த நரிகளாக வக்ரபுத்திக்காரர்களை ஆக்குகிறோம்—என்ற இலட்சிய அரிப்பு நெஞ்சைக் கிள்ளிட, கச்சை கட்டிக் களம் காண நம் இரு வண்ணக் கொடியதனைக் கையிலேந்தி காளையர் நிற்பதைக் காண்கிறோம்.

வீரம் மலிந்த இடம்; விவேகம் செழித்த இடம்; இன்றோ வீணர் உறங்கும் ஆண்டி மடம்!

தீரர் வழி வந்தோன்; தென்னவன் இராவணன் தோள்வலி பெற்றோன் இன்றோ மாடோட்டும் சின்னவன்; மடமை இருட்காட்டில் உழல்பவன்!

விழிப்புண் பெற்று, செழிப்பில் சுழன்ற இனம் விழிகளில் ஏகாதிபத்திய வேல் பாய்ச்சப்பெற்று ஏங்கித் தவித்திடுவதையும் பார்த்திடுகிறோம்!

—இந்த இழி நிலையைத் தெரிந்திருந்தும், தெரியாததுபோல் மூலையில் ஒதுங்குவது கடைந்தெடுத்த மூடத்தனம்! கண்டும் காணாதது போல் கண்களைப் புதைத்துக் கொள்வது கண்யம் மறந்த செயல்— என்பதை உணர்ந்துகொண்டோர் ஒருவர்பின் ஒருவராக தீரர் அணிவகுப்பாம் திராவிட முன்னேற்றக் கழகத்தில் உறுப்பினராய்ச் சேர்ந்து, வாழ்நாளை விழலாக்கிக் கொள்ளாமல் வீர காவியம் தீட்டப் புறப்பட்டிருக்கின்றனர்!

"மார்ச் 12-ம் நாளிலிருந்து 18-ம் நாள் வரையில் உள்ள ஒரு வாரத்தை உறுப்பினர் சேர்க்கும் வாரமாகக் கொண்டு தகுதியுள்ள மிகவான உறுப்பினர்களைச் சேர்க்கும் பணியில் மும்முரமாக ஈடுபடும்படி" பொதுச் செயலாளர் அவர்கள் 'நம்நாடு' வாயிலாக கிளைக் கழகங்களை யெல்லாம் கேட்டுக்கொண்டிருக்கிறார்கள்.

தாயகத்து மண்ணிலே அயலவர் ஆதிக்கத்தை அனுமதிக்க மாட்டோம்—என்று அங்கமெல்லாம் பூரிக்க அறைகூவல் எழுப்பும் சிங்க ஏறுகளே! தருணம் இதுதான்; தாயகத்து விடுதலைப் படையிலே உங்களையும் ஒரு வீரனாகப் பதிவு செய்துகொள்ளச் சரியான தருணம் இதுதான்; தவற விடாதீர்-என நாமும் உங்கள் ஒவ்வொருவரையும் வேண்டிக் கொள்கிறோம்!

★

தன் வாழ்நாளிலேயே முதல்தடவையாக சென்னை லயோலா கல்லூரியல் காமராசர் சுமார் 40-நிமிஷங்கள் 'வாய் விட்டுப்' பேசினாராம்!

# பிப்ரவரி 21!

தேமதுரப் பா கேட்டு, அதைத் தென்றலுக்கும், தேனுக்கும் ஒப்பிட்டு, வான் நிலவையும், மான் விழியையும் மாறி மாறிப் பார்த்து, ஒளி எதில் அதிகம் என்று எண்ணி எண்ணி களிப்படைந்தவன் கொன்று குவிக்கப் பட்டான்!

'குயிலினும் இனிதாய்க் கானம் எழுப்புகிருயே' என்று அந்தக் குமரன் கேட்க; 'நான் கருப்பாகவா இருக்கிறேன்' என்று அவள் முகம் கோண, 'இல்லைகண்ணே; கண்டோரை மயக்கிக் காமன் கணை பூட்டிய எழிலரசி கிளியோபாட்ரா கூட 'காப்பி'யன்ன பழுப்பு வர்ணக்காரிதான்' என்றுவிடை பகர்ந்து, கடை விழியிஞோரத்தில் கொட்டும் மடைதிறந்த அழகு வெள்ளத்தைச் சுவைத்தவனை-சோலையிலும் வாவியிலும் சுந்தரமாய்த் திரிந்த பருவத்தினனை சுட்டுக் கொன்று விட்டார்கள்!

அவனைப் போல மூவர்: மூவரும் முதுமை எய்தா பருவச் சிட்டுகள்!

நான்காண்டுகளுக்கு முன்பு ஒரு பிப்ரவரி 21-ம் தேதியன்று நடைபெற்ற சம்பவம் அது!

வங்க மொழிக்கு ஆபத்து என்றதும் இரு விழியும் பொறி வழங்க, இளஞ்சிங்க வடிவமெடுத்து சிறுமதியாளரைச் சுக்கு நூறுக்கத் திரண்டெழுந்த மக்கள் சக்தியின் மறு உரு அவர்கள்!

கிழக்கு பாகிஸ்தான் அரசாங்கம் உருதுவுக்குத்தான் முதலிடம் என்று அறிவித்ததும், அறப் போர்க் களத்தில் எமக்குத்தான் முதலிடம் வேண்டும் —என்று முந்திக் கொண்டது வாலிபர் வரிசை!

பிப்ரவரி 21-கீழ் வங்கம் தன் தாயைக் காக்க, ஆட்சி பீடத்தின் வெட்டுக் காய்களாக சில வீரர்களைப் பலி கொடுத்தது!

அழகு மொழி வங்கமிருக்க, அவலட்சணம் பிடித்த உருது மொழியை எப்படி நீர் ஆட்சி மொழியாக்கலாம் ?—

கனியிருக்கக் காய் கவருவரோ? மணியிருக்க மண்ணுங் கட்டியை அணிவரோ?-என்று குரல் கொடுத்து, கொலைக் கஞ்சா ஆட்சி பீடத்தின் கொடுக்கறுக்கப் புறப்பட்டது சடமை யுணர்ந்தோர் பட்டாளம்!

அந்த நாள்தான் டாக்காநகர் மருத்துவக் கல்லூரியின் எதிரே காளையர் மூவர், காட்டாட்சி நடத்திய ஆட்சியாளர் அவிழ்த்து விட்ட அடக்கு முறைக்கு ஆளாகி, துப்பாக்கி ரவைகளைத் தாங்கி உயிர் விட்டார்கள்!

வங்க மொழிக்கு மணி மகுடம் சூட்டும் பணியிலே ஆவி துறந்தார்கள் இருபத்தைந்தை எட்டிய இளம் பிராயத்தார் மூவர்!

நான்காண்டுகளுக்கு முன்பு அந்த மூவர் சிந்திய இரத்தம் இன்று வீண் போகவில்லை!

எந்த உன்னதமான காரணத்திற்காக இரத்தச் சேற்றிலே பிணங்களாக மிதந்தார்களோ, அந்த இடத்திலே இன்று இலட்சியத் தாமரை புன்முறுவல் பூக்கத் தன் இன் முகத்தைக் காட்டி விட்டது!

ஆமாம்; வங்கத்தைத் தாய் மொழியாகக் கொண்டகடைசி மனிதனின் அங்கம் அறுபட்டுத் தரையில் விழும் வரையில் நீர் உருதுவைத் திணித்து எங்கள் தாய்க்குப் பங்கம் சேர்க்க முடியாது-என்று தோள் தட்டிக் கிளம்பிய வீரர்களைக் கண்டு ஆட்சி பீடம் பணிந்து விட்டது!

அதன் விளைவுதான் இப்போது கீழ் வங்கத்தில் உருது கவர இருந்த இடம் வங்காள மொழிக்குக் கிடைத்திருக்கிறது!

தோட்டா தர்பார் நடத்தி துள்ளித் திரிந்த பருவத்தினர் மூவரைச் சுட்டுத்தள்ளிய பின், தோற்ருேம்; தோற்ருேம்—எனச் சரணுகதி பாடியிருக்கிறது பாகிஸ்தான் அரசாட்சி!

பிப்ரவரி 21—கீழ் வங்கத்து மக்கள் சக்தி மகத்தான வெற்றி பெற்ற நாள்! தியாகம் அதற்குரிய மதிப்பு பெற்ற தினம்!

குருதி மழையை பைம்புனல் நீரோடையாக்கி, வங்கத்துச் சோலையிலே மேய்ச்சல் புரிய வந்த உருது மொழியைத் தடுத்து வேலி போட்ட வெற்றித் திருநாள்!

மூவர் பலியாயினர்; முழுமதியாம் வங்க மொழியைக் கௌவி யிருந்த கருமேகமும் விடுபட்டது!

இப்போது பிப்ரவரி 21—தேசிய விடுமுறை நாள் கீழ் வங்கத்தில்!

இந்த ஆண்டு டாக்கா மருத்துவக் கல்லூரிக்குப் பக்கத்தில் உள்ள மைதானத்தில் அந்த வெற்றி விழா நடந்தது! அதைக் கண்டு களிக்க, ஆட்சி பீடத்தின் சூறைக் காற்றிலே வேரிழந்த மரம்போல் சாய்ந்த அந்த மூன்று செல்வங்களும் இல்லை!

அசிம்புரா கல்லறை மைதானத்தில் அன்றைய தினம் செங்கதிர் எழும் நேரத்தில், சிந்திய கண்ணீரைத் துடைத்தபடி ஆயிரக் கணக்கானவர் மறைந்துபோன யுவர்களுக்கு மரியாதை செலுத்தினர்கள்!

காலை 9-30 மணிக்கு அந்த மாநிலத்து முதலமைச்சரும், மொழிக்காக உயிர்நீத்த பர்கட் என்னும் மாணவத் தோழரின் தாயாரும் வந்திருந்து, தியாகிகளுக்காக நிறுவப் போகிற நினைவுச் சின்னத்துக்கு கல் நாட்டுவிழா நடத்தி வைத்தார்களாம்.

**"பிப்ரவரி 21-ஐ மறக்க மாட்டோம்!"**

**"தியாகிகள் சிந்திய செந்நீரையும் மறக்க மாட்டோம்!"**

—என்று கோஷமெழுப்பி மலர்ச் செண்டுகளால் மறைந்து போன வீரர்களைக் கௌரவப் படுத்தினர்களாம்!

இப்போதிருக்கும் கீழ் வங்க அரசாங்கம் துப்பாக்கிக் குண்டுகளுக்குப் பலியாகி உயிர் நீத்த உத்தமர்களுக்கு நஷ்ட ஈடு வழங்கவும் முன் வந்திருக்கிறதாம்!

—அந்த அளவுக்கு தியாகத்தை எடை போட்டும், தகுதி நிலை உணரப் பெற்றும் கண்யத்தைக் காப்பாற்றிக் கொள்ள முன் வந்திருக்கிறது மேல் பாகிஸ்தான் ஆட்சி பீடம்!

பிப்ரவரி 21—கீழ் வங்க மக்க மக்களின் உரிமைக் கதிரவன் உதயமான கிழக்கு திசையென அறிவிக்கிறது!

தாலமுத்து நடராசர்களைப் பலி கொடுத்தத் தமிழகமே! நீ பெற்ற வெற்றி மின்னலைப் போல சிறிது நேரமிருந்து மறைந்து போகும் தன்மை கொண்டதுதானு? விந்தியம் தாண்டி தாவப் போகிறதே இந்தியெனும் வேற்று மொழி? அரசியல் சட்டம் வற்புறுத்துகிறது;எனவே இந்தி வேண்டும் —என சட்டசபையில் பழைய பல்லவியைப்படிக்கிருரே சுப்ரமணியம்! என்ன செய்யப் போகிருய்? எத்தனை பேரைத் தத்தம் செய்யப் போகிருய்?

—இப்படி நம்மைப் பார்த்துக் கேட்கிறது பிப்ரவரி 21!

பதில் சொல்லுவோம்; செத்த மொழியைத் திணிப்பவர்களைச் செதில் செதிலாகப் பிய்த்தெறிவோம்-என தோள் தட்டி, வாள் நீட்டி, வைர நெஞ்சத்தோடு பதில் சொல்லுவோம்!

—(மா)

★



கூட்டத் தலைவர் பொதுச் செயலாளர் பேசுகிருர். அருகில் காஞ்சி கல்யாணசுந்தரனுர்.



# நமது தாழ்வாரத்தில் நாம்!



சென்னை நுங்கம்பாக்கத்தில் தி. மு. கழகத்திற்குச் சொந்தமான "சுந்தரத் தாழ்வாரம்"—தி. மு. க. திடல்!

திடலின் நுழைவு வாயில்



வாட்டும் வெயிலில் பந்தல் அலங்காரப் பணி புரியும் காளையர்.



திடலில் தலைவர்கள் மேடைக்கு வரத் தனி வழி.

★



இசைச் செல்வி கஸ்தூரியின் தமிழிசையுடன் கூட்டம் துவங்குகிறது.



மேடையில் தலைவர்கள்.

"அரசரின் மஞ்சத்து ராணியாக மட்டுமின்றி, வெஞ்சமரில் வாளெடுத்து வேலெடுத்துப் போர் புரியும் வீராங்கனையுமன்றோ கோப்பெருந்தேவி—அவள் எங்கே, வளையொலியால் மலைசிகர்த்தவரை வளைத்து விட்ட இவளெங்கே – என்று வீரர்களின் பாசறைகளில் பேசப்படுகிறது. இத்தனை எதிர்ப்புகளையும் சமாளிப்பதற்கு நான் தயாராகிக் கொண்டிருக்கிறேன். ஆனாலும் மைத்துனரே! அவள் மகன் இன்பசாகரன் வளர்ந்து, இளவரசு மகுடத்தைத் தலையில் தூக்குவதற்குள் அழிக்கப்பட்டு விட வேண்டும். சுந்தரபுரி, சுழற்கண்ணியின் சொத்தாக மாற வேண்டும். என் வயிற்றிலே வளர்ந்து கொண்டிருக்கும் சிசு இந்த நாட்டு செங்கோலுக்கு உரிமை பாராட்ட வேண்டும். அதற்குத் தடை அவளது அருமருந்தன்ன மகன்! தடை இடரப்பட ஒரு வழி கூறும் மைத்துனரே! உமது உதவியோடுதான் நான் ஜெயக் கொடி நாட்ட வேண்டும்.

"மைத்துனரே! உமது மறைவிலே நின்று கொண்டுதான் என் ஜீவ லட்சியத்தை நிறைவேற்ற வேண்டும். ஏன் மௌனமாக இருக்கிறீர் — பேசும்! விலகி நின்று பேசுகிறேனே என்ற கோபமா? வேந்தர் வரும் நேரமாயிற்றே என்றுதான் பயந்தேன். இதோ...மூடிக் கிடக்கும் உமது முரட்டு உதடுகளை எனது ரோஜா இதழ்களால் திறக்கிறேன்...இச்! இச்!! போதுமா? நீண்ட விருந்து மற்றொரு நாளைக்கு! மைத்துனரே! சுந்தரபுரியின் ராணி சுழற் கண்ணி—அவள் குழந்தைக்கு இந்த நாடு உரியது—இப்படி ஒரு நல்ல எதிர்காலம் தோன்றுமா? அதற்கான திட்டம், உமது தீட்சண்ய மிக்க மூளையிலே இப்போதே உதயமாகுமா?"

"கவலைப்படாதே சுழற்கண்ணி! இந்த தீட்சண்யன் இருக்கும்போது திட்டங்களுக்கா குறைவு? தித்திக்கும் முத்தங்களை நீ தந்ததுபோல், சித்திக்கும் யோசனைகளைத் தரவும் நான் தயங்க மாட்டேன். அரசரின் இளைய ராணியாவதற்கு அபூர்வமான ஆலோசனை வழங்கினேனே அதை மறந்தாயா? அதைப் போலவே இளவரசன் இன்பசாகரனை வாழ்க்கைப் புதரிலிருந்து பறித்துப் போட சரியான வழி கண்டு பிடிக்கிறேன்.

"இன்பசாகரன் இளம் அரும்பு! அந்த அரும்பை விரலால்கூட நசுக்கி எறிந்துவிட முடியும் நான் நினைத்தால்!

"ஆனால், அந்த அரும்பு இருக்குமிடமோ அரண்மனைத் தோட்டம். வேலியற்ற கொல்லையல்ல, வேந்தன் வீட்டு முல்லை மொக்கு இருக்குமிடம்! சர்வ ஜாக்கிரதையாக சதியை நிறைவேற்ற வேண்டும். இளவரசன் சாக வேண்டும். ஆனால் நாம் கொன்றதாகத் தெரியக் கூடாது — கொலை செய்யப்பட்டதாகவே செய்தி வருதல் கூடாது. இயற்கையாகவே இறந்தான் என்று நாடும், நாடாளும் மன்னனும் நம்ப வேண்டும். அதற்கு வழி சொல்லுகிறேன்!"

"சொல்லும் மைத்துனரே சீக்கிரம்!"

"இன்னொன்று கொடு, சொல்லுகிறேன்!"

"இதோ! ஒன்றென்ன: ஒன்பது!"

"ஆகாகா! சுழல்! சொக்கி விட்டேன்—சொக்கி விட்டேன் — முத்த போதையிலே மூளை வேலை நிறுத்தம் செய்து விட்டது. நாளை விடியற்காலை திட்டத்தோடு வந்து உன்னை சந்திக்கிறேன்!"

"வேந்தர் பள்ளியறையை விட்டுப் போன பிறகு வாரும்!"

"அவர் இருக்கும்போது வர எனக்குப் பைத்தியமா?"

"சரி! திட்டம் நேர்த்தியாக இருக்க வேண்டும்!"

"உன்னைப் போல!"

"இல்லை; நம் உண்மைக் காதலைப் போல!"

"கைகாரியடி சுழற்கண்ணி நீ! கட்டிலறையிலே அரசனிடம் கூட இப்படித்தானே கதையளப்பாய்!"

"எனக்கு இரண்டு இருக்கிறது அத்தான், இருதயம்! ஒன்றில் உமது ஆசை! மற்றொன்றில் சுந்தரபுரியின் சிம்மாசனத்தைப் பற்றிய கனவு! இரண்டாவது இருதயத்தால்தான் அரசனைப் புகழ்கிறேன் - ஆராதிக்கிறேன்—ஆனந்தம் பொழிகிறேன்!"

"சுழல்! நேரமாகிறது, வருகிறேன் அதோ அரசர் வருவதுபோல் தெரிகிறது!"

"விடியற்காலை! திட்டம்–மறந்து விடாதீர்!"

"விருந்து! அதையும் நீ மறந்து விடாதே!"

சுழற்கண்ணி, அவன் பேச்சை ஆமோதிப்பது போல தலையசைத்துக்கொண்டு புன்னகை சிந்தினாள். தீட்சண்யனே அந்த சிரிப்பை ரசித்தவாறு அந்த இடத்திலிருந்து நகர்ந்தான். தடித்த உதடுகளை அழுத்தமான நாவினால் தடவியபடி ஏதோ ஒரு இன்பச் சுவையை அனுபவித்தவாறு அந்த முரடன் சுழற்கண்ணியின் பார்வையிலிருந்து மறைவதற்கும்—'சுந்தரி!' என்றவாறு சுவைக் காவியம் படிப்பதற்கு அரசன் வருவதற்கும் சரியாக இருந்தது.

மன்னன் வந்தான். தீட்சண்யனிடத்திடத்திலே அவள் கூறியவை அனைத்தும் உண்மையே என்பதை நிரூபிப்பது போல் அவள் மடியில் சாய்ந்தான்–பிடியில் சிக்கினான்.

★

சுழற்கண்ணி சுந்தரபுரிமன்னனின் இளைய ராணி. அவளுக்கு மைத்துனன் தீட்சண்யன். தூரத்து உறவு. அரண்மனையிலே அவனுக்கு மெய்காப்பாளன் வேலை. அரசனது மெய் காக்கவும்–ஓய்வு கிடைத்து, நேரம் வாய்க்கும்போது சுழற்கண்ணியின் மெய் தழுவிக் கிடக்கவும்—ஆகிய இரண்டு வேலைகளும் மாறிமாறி வந்து கொண்டிருந்தன அவனுக்கு! கனிரசம் பருக கசக்குமா? அதிலும் அவன் கரடித் திருமேனியன்! தேன்கூடு போல சுழற்கண்ணி, வலிய வலிய வருகிறாள், கொம்பு வளைந்து தேனைக் கொட்டி கரடிக்குப் பசி தீர்ப்பது போல! கற்பனை கூடச் செய்ய முடியாது. சுந்தரபுரி அரண்மனையிலோ இது நித்ய நிகழ்ச்சியாக இருந்தது. பாராங்கல்லையொத்தக் கரடு முரடான அவனது மார்பகத்தில் பச்சைக் கிளி போன்றவள் தொத்திக் கிடந்தாள்.

அவனோ, "என் இச்சைக் கினியவளே! இனிப்பு தரும் இன்னமுதே!" எனப் பாழ்ந்தகுரலெடுத்து பாடிக் கொண்டிருந்தான். திரை மறைவில் நடக்கும் இந்த அவமானகரமான அநியாயத்தின் அடையாளமும் தெரியாமல் அரசருக் கரசன் அவளை நோக்கி, "உத்தமியே! உயர்ந்தவளே! உல்லாசி! ஊர்வசி!" எனப் புகழாரம் தொடுத்துக் கொண்டிருந்தான்.

சுந்தரபுரி சாம்ராஜ்யத்தை சுடுகாடாக்க வந்த "வசந்த சேனை" சுழற்கண்ணியின் உருவத்திலே உலவுகிறாள் என்பது அந்த ராஜ ரசிகனுக்கு புரியாமல்தான் போய் விட்டது.

அரசனின் அந்தப்புர மயிலாக—ஆலோசனை வழங்கும் அமைச்சாக—களம்புகு நேரத்தில் பின்தொடரும் மறத்தியாக — சுந்தரபுரி மக்களின் சுகத்தைக் கவனிக்கும் பாசமுள்ள தாயாக—அந்த மாளிகையிலே சுடர் விட்டுக்கொண்டிருந்த மாணிக்கமாம் கோப்பெருந்தேவியாரைக் கொந்தளிக்கும் கடலாக மாற்ற வந்துசேர்ந்தது கொடுமையான புயல், சுழற்கண்ணி என்ற பெயரில்!

மன்னனுக்கு ராணியாக இருந்த தேவி, இன்பசாகரனுக்குத் தாயாகவும் மாறிய நேரந்தான், சுழற்கண்ணியின் படையெடுப்புக்கு ஏற்ற நேரமாகிவிட்டது. முற்றுகையிட்டாள் முடிசூடியை! உடனே வெள்ளைக் கொடியைப் பறக்கவிட்டான் வேந்தன்; ஆயிரந்தேர் – ஐயாயிரம் காலாள்–ஆனைப்படை–புரவிச்சேனை அத்தனையும் தாக்கினாலும் அசைக்க முடியாது அவன் அரண்மனைக் கோட்டைச் சுவரை! அவளோ, ஒரு விழி வீச்சில், அவனது மனக் கோட்டையைச் சுக்குநூறாக்கி, நொறுங்கிப் போன ஒவ்வொரு அணுவிலும் நின்றுகொண்டு வெறியூட்டும் நர்த்தனம் புரிந்தாள்.

தேவி–இன்பசாகரனோடு, தாய்க் குலத்தின் பெருமையைத் தரணிக்கு அறிவித்துக் கொண்டிருந்தாள்.

தேவனோ—'திராட்சையினும் இனியதடி இந்த ரசம்' என இதழ் பருகிக்கொண்டு கிடந்தான் இளையவளோடு! அதுவும் அவனுக்குப் புதியவளோடு!

கதிர் மறைந்த உலகிற்கு இருள் நீக்கும் நிலவுபோல, கோப்பெருந்தேவியின் கவலை படிந்த வாழ்விற்கு வாட்டம் தவிர்க்கும் வைரமாக இன்பசாகரன் திகழ்ந்தான்.

பலகணியின் வழியாகத் தூரத்திலிருக்கும் பூரணச் சந்திரனைப் பார்த்து ரசிப்பதிலே ஒரு மகிழ்ச்சி இல்லையா? அதுபோலவே அரசனை அருகிலே வைத்து அன்பு காட்ட முடியா விட்டாலும் தொலைவிலேயிருந்து அவனைத் தொழுது கொண்டிருந்தாள் கோப்பெருந்தேவி.

பலகணிப் பார்வையாளர் மீது—நிலவு, ஒளி மழையையாவது பெய்கிறது; அதுவும் கிடைக்க வில்லை அந்த "அபாக்கியவதி"க்கு!

இன்பசாகரன் மட்டுமே அவளுக்கு ஆறுதல் பொருளானான். அந்தப் பொருளையும் பூமியிலே புதைத்து விடத் துடித்துக் கொண்டிருந்தாள் சுழற்கண்ணி. அதற்கான திட்டத்தையும் தீட்சண்யன் தயாரித்து விட்டான்.

"இந்த சதியில் ஜெயம் நமக்கே!" என்று ஒருவரை யொருவர் தழுவியபடி உரக்கக் கூவி மகிழ்ந்தனர் ஊர் கெடுக்க வந்த ஜாலக்காரர்கள்.

திட்டத்தின் முதற்கட்டம் மிகத் தீவிரமாக அமுலுக்குக் கொண்டு வரப் பட்டது.

★

திடீரென சுழற்கண்ணி இளவரசன் இன்பசாகரன் மீது அன்பு மழை பொழிய ஆரம்பித்தாள். "அக்காளுக்கும் என்னைப் போலத் தானே ஆசையிருக்கும்—அவளோடும் பேசி மகிழ்ந்து, கூடிக் குலவியிருப்பதுதானே தங்களைப் போன்ற தர்மம் தவறாதவர்களுக்குத் தகுதியான காரியம்!" என்று

# தாய்மை

(…சி)

உபதேசம் செய்ய ஆரம்பித்தா… …ட்பான். இது கண்டு அரண் மன்னனிடம்!

"தேவி! நான் எப்படியோ–… …ற்கண்ணியின் மாயையால் உங்கள் வாழ்… குறுக்கிட்டு விட்டேன். என்… மன்னித்து விடுங்கள்! இனி … எங்கு போவேன்; தங்கள் தங்… யாக என்னைக் கருதி எனக்கு வ… வளியுங்கள்!" என்று கோப்பெரு… தேவியின் பாதங்களில் கண்… ரைச் சொரிந்தாள்.

மன்னன்–மகாராணி–இளவரச… அனைவருமே அவளது மாய்மால… தில் மயங்கினர்.

"அரண்மனையில் புதிய இன்… பம்! சந்தோஷமான திருப்ப… அரசரும் அரசியும் ஒற்றுமைப் பட்… விட்டனர். சுழற்கண்ணி, தன் தவ… களை உணர்ந்து திருந்தி விட்டா… அப்பப்பா; இளையராணி இப்போ… இன்பசாகரனை எப்படி கவனிக்… ருள் தெரியுமா? பெற்ற தாய் கூ… இவ்வளவு அன்புகாட்ட முடியாது!" என்று சுந்தரபுரி முழுதும் குர… கிளம்பியது.

இளவரசன், இப்பொதெல்லாம் தாயிடம்கூட அவ்வளவு அ… மாகத் தழுவதில்லை. இளையரா… யின் மாளிகையிலேயே விளை… கிடக்கிறான். அவள் கையால்… அவனுக்கு உணவு தரவேண்… அவள் சொன்னால்தான் எதை…

…ரையே அதிசயித்தது. அரசரும் …ழற்கண்ணியின் மீது புதிய பாசம் …ண்டார். அரசியும். அவளைத் … அருமைத் தங்கை போல நடத் …ள். தங்கையின் நெஞ்சிலே …யும் நெருப்பை அவள் எங்கே …டாள்!

★

…ரு நாள் சுழற்கண்ணியின் மாளி…யில் இன்பசாகரன் குழல் வாத்…க் கருவியுடன் நுழைந்தான். …ரியாதவள் போல அவள், "இது …இந்தக் குழல் வாத்தியம்?" …று கேட்டு வைத்தாள்.

"…தீட்சண்யன் கொடுத்தா…மா!" என்று கூறியபடி அதை …க் கொண்டு கூத்தாடினான் …பசாகரன்.

…தித்திட்டம் இரண்டாவது கட்…தை அடைந்து விட்டது. இனி …ம்பிக்க வேண்டியதுதான் நமது …லையை என்ற முடிவோடு, அவள் …னைத் தழுவி யெடுத்துக் தன் …சத்தின் பக்கம் உட்கார வைத்து …தங்களால் அவன் முகத்தை …க்க வைத்தாள்.

…ன்பதற்காக ரோஜாப் பூவைப் …புபவர்கள் அதன் மென்மையை …வண்ணத்தையும் வியந்து …ண்டா இருப்பார்கள்! இதழ் …ள் கிள்ளி வாயிலே போட்டுக் …ண்டே கடைசியில் அந்தக் …வை எறிந்து விடுவார்கள்!

அப்படித்தானிருந்தது, அவள் அந்த மலரொத்த இளைய மன்னனை எடுத்து முத்தமிட்டதும், அருகே உட்கார வைத்துக் கொண்டதும்!

"கண்மணி! உனக்கு ஒரு அருமையான பண் கற்றுக் தருகிறேன். அதை இந்தக் குழலில் நீ ஊதினால் பிரமாதமாக இருக்கும்!" என்று பேச்சை ஆரம்பித்தாள், வபதில் இளமையும், வஞ்சகத்தில் முதுமையுங் கொண்ட அந்த வடிவழகி!

"கற்றுக் கொடம்மா!" என்று குழலை அவளிடம் கொடுத்தான் இளவல்.

அவளும் குழல் மூலம் பண் எழுப்பினாள். "இனிமை! இனிமை!!" எனப் பாராட்டினர் தோழியர்.

அந்தப் பண் பாலகனின் மனதையும் கொள்ளை கொண்டது. தானும் அதைக் கற்றுக் கொள்ள வேண்டுமென்கிற ஆர்வம் இளம் நெஞ்சில் கொழுந்து விட்டது.

"எப்படியாவது எனக்கு இந்தப் பண்ணைக் கற்றுக் கொடம்மா!" எனப் பிடிவாதம் செய்தான்.

அவளும் அந்த வேண்டுகோளைத் தானே அந்தப் பிஞ்சு மனதிலேயிருந்து எதிர்பார்க்கிறாள்.

இரண்டு நாள் சிரமம் எடுத்துக் கொண்டாள். இளவரசன் பண், பாடமாகி விட்டது!

"அருமை தம்பீ அருமை! நான் வாசித்ததைவிட நீ வாசிக்கும்போது, பண்ணிலே மழலையின் இனிமை மறைந்திருந்து பெருமையை அதிகமாக்குகிறது. ஆகா! இந்த கீதத்தை அரண்மனை நந்தவனத்திலே உட்கார்ந்து வாசித்தால் மயில்கள் எல்லாம் தானே வந்து எதிரே நின்று ஆடும்!" என்று சாகசப் பேச்சை தாய்க் குரலிலே கலந்து தந்தாள் சுழற்கண்ணி!

"இதோ இப்போதே போய் தோட்டத்தில் வாசிக்கிறேன். தோகை மயில்கள் ஆடுகின்றனவா என்று பார்க்கிறேன்" எனக் குழலுடன் ஓட்டம் பிடித்தான் இளவரசன்.

சுழலியின் கண்கள் அகல விரிந்தன. அவள் முகத்தில் புதிய தேஜஸ் காணப்பட்டது. 'வெற்றி!–வெற்றி!!' எனத் தனக்குள் முணுமுணுத்துக் கொண்டாள், மகிழ்ச்சியோடு!

★

அரண்மனைத் தோட்டம்–அடுக்கு மல்லிகைப் புதரின் ஓரம்—அழகே உருவெடுத்த அரசிளங் குமரன் ஆரம்பித்து விட்டான் குழல் வாத்தியத்தை! இளையவள் கற்றுத் தந்த பண்ணை மாறி மாறி ஊதினான். பாவம்; அவனுக்கென்ன தெரியும்; அவள் கற்றுத்தந்த கீதம் பாம்புகளை

அருகே வரவழைக்கும் கீதமென்று!

பண்ணை அவனுக்குப் பாடமாக்க வேண்டும்.

அவன் அதை ஊதிக் கொண்டிருக்கும்போது தோட்டத்தில் தொலைவிலே விஷப் பாம்பை விட்டுவிட வேண்டும். குழலோசை கேட்டு பாம்பு அவனருகே வந்து படமெடுத்து ஆடும். பண்ணை அவன் நிறுத்தினால், உடனே பாம்பு அவன் மீது சீறிப் பாய்ந்துவிடும்.

இப்படி யொரு திட்டத்தை தீட்சண்யன் தீட்டித் தந்து, அதற்கு வெகுமதியாக அவளிடம் பெற வேண்டியதைப் பெற்று, அவளும் இளவரசனை அரண்மனைத் தோட்டத்திற்கு அனுப்பி விட்டாள். இன்பசாகரனின் குழலோசை குளிர்ச்சியை மொண்டு மொண்டு ஊற்றியது! ஆனந்தத் தென்றல் வந்து ஆரத் தழுவுவது போன்ற உணர்ச்சியைத் தந்தது!

மகுடியிலும் இல்லாத மயக்க உணர்வை அந்தக் குழலிலேயிருந்து புறப்பட்ட பண் கிளப்பியது.

நேரம் பார்த்துக் கொண்டிருந்த கோர மனிதன் தீட்சண்யன், தான் பிடித்து வைத்திருந்த பாம்பை இளவரசனுக்கு அருகேயுள்ள புதரின் பக்கமாக கீழே விட்டான். விடுபட்ட பாம்பு, குழலோசை நோக்கி நகர்ந்தது. தன்னை நோக்கி ஆபத்து ஊர்ந்து வருகிறது என்பதை அறியாத அந்த அழகுப் பிறை நிலவு, சின்னம்மா கற்றுத் தந்த பண்ணை விடாமல் ஊதிக் கொண்டேயிருந்தது.

இன்னும் சிறிது நாழிகையில் மயில்கள் எல்லாம் வந்து, தன் முன்னே ஆடப் போகின்றன என்ற நினைவோடு, இன்னும்—இன்னும் அதிக உற்சாகத்தோடு குழல் ஒலி புறப்பட்டது!

நகர்ந்து வந்த நாகம், படமெடுத்தபடி பாலகனின் எதிரே மயங்கி நின்றது. அதைப் பார்க்காத இளவரசன் குழலூதும் கவனத்தில் கண்களை மூடிக் கொண்டு உட்கார்ந்திருந்தான்.

கண்களை மூடிக் கொண்டே குழல் ஊதுவது—திடீரெனத் திறந்து பார்த்தால் எதிரே மயில்கள் ஆடும்—அதைப்பார்த்து மகிழ்வது!–இப்படி ஒரு இன்பக் கனவோடு அவன் இசை முழக்கம் செய்து கொண்டிருந்தான்.

அவன் என்ன கண்டான்; எதிரே உயிர்வாங்கும் பாம்பு பல்லிலே விஷம் தேக்கியபடி ஆடிக் கொண்டிருக்கிறது என்பதை!

மயங்கி நிற்கிறது நாகம்! மயக்கம் தெளிந்தால் இளவரசன் அதற்கு இரையாவான்!

இசை நின்றால், உடனே பாம்பின் மயக்கமும் தெளிந்துவிடும்!

என்ன நடக்கப் போகிறது என்பதை உப்பரிகையிலிருந்தபடியே இளையவள் பார்த்துக் கொண்டிருந்தாள்.

புதரின் மறைவில் இருந்தபடியே தீட்சண்யன் புன்னகை சிந்திக் கொண்டிருந்தான்.

அந்தக் கொடுமையைக் காண்பதற்குக் கோப்பெருந்தேவியும் அங்கு வந்து சேர்ந்தாள். கீதம் அவளைக் கவர்ந்தது. எங்கிருந்து வருகிறது என கவனித்தாள். இன்பநாதம் எழுப்புவது தன் மகன் எனக் கண்டாள். மகிழ்ந்தாள். அடுத்த கணம் மகிழ்ச்சி மறைந்தது. சுந்தரபுரியின் எதிர்கால் மன்னன்—அவனெதிரே சாவின் நர்த்தனம்!

வயிற்றிலே கிடந்த வைடூரியம்! அதை விஷத்தால் குளிப்பாட்டி வேகவைக்க எதிரே மரணத்தின் மயக்கம் நிறைந்த சதிராட்டம்!

"அய்யய்யோ—என்ன செய்வேன்" என நிமிர்ந்தாள். இளையவள்—தீட்சண்யன் இருவரும் இருப்பதை உணர்ந்தாள். அதைப் பார்க்காதவள்போல் பாலகன் பின்னே வந்தாள். அவளுக்குப் புரிந்து விட்டது, சதி பற்றிய விளக்கம். குழலோசை நின்றால், தன் குமரனை பாம்பு தீண்டி விடும் என்பதையும் தெரிந்துகொண்டாள். அவளது தாய் உள்ளம் தணலிட்ட புழுவாயிற்று.

எந்தத் தாய்க்குத்தான் சகிக்கும்! தான் பெற்ற தங்க விக்ரகத்தின் மேனியெங்கும் நீலம் பாய்ந்து, அலங்கோலமாக விழப்போவதை எந்த அன்னைதான் தாங்கிக் கொள்ள முடியும்!

"இன்பசாகரா" என்று சப்தம் போட்டால் அவன் திடீரெனக் குழல் வாசிப்பதை நிறுத்தி விடுவான்—உடனே நாகம் தன் வேலையை முடித்துவிடும். என் செய்வாள் தாய்! கத்தினாள். எப்படி? "இன்பசாகரா! ...வாத்யத்தை நிறுத்தாதே! நிறுத்தாதே! ஊதிக் கொண்டேயிரு—ஊதிக் கொண்டேயிரு!" என்று அலறினாள். தாயின் குரல் அந்த இளவலின் காதிலே ஒலித்தது. கண்ணைத் திறந்தான். எதிரே பாம்பு—நடுக்கம் தாங்க முடியவில்லை. எழ முடியாதபடி ஆகி விட்டான்.

தொடர்ந்து சப்தமிட்டுக் கொண்டேயிருந்தாள்.

"நிறுத்தாதே! ஊது! ஊது!!" என்று!

அவனும் ஊதிக் கொண்டேயிருந்தான், ஏன் எதற்கு என்று புரியாத நிலைமையில்!

"ஊது! ஊது!!" என்று கூறிக் கொண்டே தாய் அவனருகே வந்து கொண்டிருந்தாள்.

குழலோசை உச்ச கட்டத்தை அடைந்தது. நாகமும் இன்னும் மேலே உயர்ந்து படந்தூக்கிஆடியது.

"நிறுத்தாதே! ஊது! ஊது!"–தொடர்ந்ததுஅலறல்!

அதையொட்டி "ஆ!" என்ற சப்தம்!

ஆம்; கோப்பெருந்தேவி, தடாரென்று அந்தப் பாம்பின் முன்னே விழுந்தாள்.

படமெடுத்திருந்த பாம்பு அவள் மீது பாய்ந்தது–அவள் உடலிலே விஷம் பரவியது. இனியென்ன—பாம்பு ஓடியது. ஓடுகிற பாம்பை வாளால் வீசிக் கொன்றுவிட்டு அங்கு ஓடிவந்து விழுந்தான் மன்னவன்.

"பிரபூ! பிரபூ!"

கோப்பெருந்தேவி அழுதாள்.

"செல்வத்தை ஜாக்ரதையாகப் பார்த்துக் கொள்ளுங்கள்!" என்று இன்பசாகரனை இழுத்து அரசனின் கையிலே ஒப்புவித்தாள்.

"அம்மா!" என ஓலமிட்டான் இளவரசன்.

தாய்மை தன் கடமையைச்செய்து விட்டு, கடையை மூடிக் கொண்டது.

அரசன் இளையராணியையும் தீட்சண்யனையும் வெறித்துப் பார்த்தான். அவர்கள் அங்கிருந்து ஓட்டம் பிடித்துக் கொண்டிருந்தனர்.

"விடாதீர்கள், அவர்களை!" என்று கத்தினான்.

"அய்யோ! ஒரு விநாடி தவறி விட்டது—இல்லையேல் நாகத்தை வாளால் நறுக்கி விட்டு, மனைவி–மகன் இருவரையுமே காப்பாற்றியிருப்பேன்!" என அங்கலாய்த்துக் கொண்டான் அரசன்.

என் செய்வது? தாய்மையின் மதிப்பு தரணிக்குத் தெரிய வேண்டுமே — அதனால்தான் போலும் அவன் சிறிது தாமதமாக அங்கு வர நேர்ந்தது!

# பாதிரி தொடுக்கும் போராட்டம்!



**சைப்ரஸ் தீவிலே நடைபெற்றுவரும் உரிமைப் போராட்டம் காரணமாக நாடுகடத்தப் பட்டிருக்கும் தளபதி; பாதிரியார் மகாரியாஸ்!**

எழுந்தது இளம் பரிதி!
விழுந்தது இருட்கணம்!

—என சைப்ரஸ் தீவிலே உரிமைக்கொடி உயர்த்திப் பிடிக்கப் பட்டிருக்கிறது!

நாட்டுக்காக வீட்டை மறந்து, விடுதலைப் படை நடத்துவோர் சாரை சாரையாய் அணிவகுத்துக் கிளம்பி விட்டார்கள்!

சைப்ரஸ் தீவு இன்று ஆங்கில ஏகாதிபத்தியத்தின் காலடியிலே கிடந்து கண்ணீர் வடித்துக் கொண்டிருக்கிறது!

அந்தத் தீவின உரிமையாளர்களெல்லாம் எங்களைப் பிரித்து வைத்துப் பேதம் கற்பிக்காதீர்கள்; தாயகமாம் கிரேக்கத்தோடு இணைத்து நீதி வழங்குங்கள்-எனக் கர்ஜனை புரிந்த வண்ணமிருக்கிருர்கள்!

வெள்ளை ஆதிபத்தியக் காவலரோ சைப்ரசை விட்டு அகலும் நோக்கம் கொண்டோராய் இல்லை!

சைப்ரஸ் கிரேக்கத்துடன் இணைவதைத் தடுக்கின்றனர்!

போர் என்று ஏற்பட்டால் அந்த நேரம் சைப்ரஸ் சரியானதொரு யுத்த முகாமாக அமையுமே என்ற பேராசை காரணமாக பேயாட்டம் போடத் துவங்கியிருக்கின்றனர்!

—எனவேதான் உரிமைக்குரலை, விடுதலைக் கனலை வேகமாக்கிக் காட்ட வேண்டிய கட்டாயம் சைப்ரஸ் பெருங்குடிகளுக்கு ஏற்பட்டிருக்கிறது!

சைப்ரஸ் கிரேக்கத்துடன் இணைந்து கைகோர்த்துச் செல்ல வேண்டுமென்கிற மாபெரும் போராட்டத்துக்கு யார் தெரியுமா தலைவர்?

**மகாரியாஸ்!**

வாலிபனோ என்று நினைப்பீர்கள்; யாரிடம் இவர் போர்த் திறமை பயின்ருர்? வேல் பிடிக்கத் தெரியுமா? வேழத்தை எதிர்த்து மார்பு காட்டும் அளவுக்கு நெஞ்சுரம் கொண்டவரா? என்றெல்லாம் வினவத் தோன்றும், தளபதி அவர் என்று கேள்விப்பட்டதும்!

உண்மையில் ஆச்சரியமாகத்தான் இருக்கும்-மகாரியாஸ் ஒரு பாதிரியார்!

சைப்ரஸ் தீவுகளின் விடுதலையாம்-தீக்குழம்பை மூடி வைத்துத் திறந்து விடக் காத்திருக்கும் எரிமலை மகாரியாஸ் ஒரு பாதிரிச் சாமியார்!

நம்ப முடியவில்லையா? போராட்டம்; காராக்கிரகம்—என்று கேள்விப்பட்டதும் கோவில் கர்ப்பக் கிரகத்துக் குள்ளேயும், மடப்பள்ளியின் உட்புறத்திலும் வாழ்கின்ற குருக்களையும், பூசாரிக் கூட்டத்தையும் பார்த்துப் பழக்கப்பட்ட உங்களுக்கு பாதிரி ஒருவர் படை நடத்துவதை நம்ப முடியவில்லையா?

மகாரியாஸ் பாதிரியாரேதான்!

சுவிசேஷத்தின் பெருமைகூறிய வாய்தான், சுழற்று வாளை — என்று உத்தரவு போடுகிறது!

வேத புத்தகங்களைப் புரட்டுகின்ற கரங்கள்தான் சைப்ரஸ் தீவின் வீர காவியம் தீட்டும் வேலையில் ஈடுபட்டிருக்கிறது!

'ஆமென்' கூறி, கலைந்து செல்லுமின் — என்று பிரார்த்தனைக் கூட்டத்தைப் பார்த்துக் கூறிடும் கிருத்துவத் தலைவர்தான் புறப்படுங்கள் போருக்கு—எனக் கட்டளை பிறப்பித்திடும் கடமை வீரனாகியிருக்கிருர்!

தள்ளாத வயது; வெளிறிய தாடியும், மலரினும் மெல்லிய இதயமும், களிறினும் சிறந்த வலிமையும் கொண்டவர்—அவர்தான் தாய்நாடுகாக்கத் தன்னையே அர்ப்பணம் செய்துகொள்ளத் தயார்; தயார்—என அறைகூவல் விடுகிருர்!

மதகுரு; மாதாகோவிலுண்டு: தானுண்டு — என அடங்கிக் கிடக்க வேண்டியவர், சைப்ரஸ் தீவுதான் என் மாதா — என உணர்ந்து, தீங்கு களையத் தோள் தட்டிப் புறப்பட்டிருக்கிருர்!

ஆம்; அந்த முது கிழவரைத்தான் சென்ற கிழமை நாடு கடத்தியிருக்கிருர்கள், மண்ணாசை பிடித்த வெள்ளைக்கார மமதையாளர்கள்!

சேசெல்லெஸ் தீவுகளிலே மகாரியாஸ் பாதிரியார் காவல் வைக்கப் பட்டிருக்கிருர்!

சேசெல்லஸ் இங்குள்ள பழைய அந்தமான் தீவைப் போல! அங்குதான் இந்த விடுதலைக் கனல் பாதுகாக்கப்பட்டு வருகிறது காவல் கைதியாக!

அமெரிக்காவிலே உள்ள கிரேக்க நாட்டுக் காரர்களிடமிருந்து நிதி வசூலித்து ஆயுதங்கள் இறக்குமதி செய்யப் பயன் படுத்திஞராம்! துண்டுப் பிரசுரங்களையும், வெடி குண்டுகளையும் வாங்குவதற்கு முயன்ருராம்!

—இப்படியெல்லாம் பாதிரியார் மீது குற்றச்சாட்டுகள் குவிக்கப்பட்டிருக்கின்றன!

வழக்கமாக விடுதலை வீரன் மீது திருப்பப்படும் கணைகள்தான்! வழக்கம் போலவே அவரும் துவண்டுவிட வில்லை; தொய்வு ஏற்பட்டு விடவில்லை, உரிமைப் போர் என்னும் தொடர் கதையில்!

இங்கும்தான் இருக்கின்ருர்கள் பாதிரியின் நிலையிலே உள்ள பண்டார சன்னதிகள்!

அவர்களுக்கிருக்கிறதா மகாரியாசுக்குள்ள மான உணர்ச்சி?

குன்றக்குடி அடிகளார் குன்றின் மீதேறிக் கொக்கரிக்கிருர்; தாயகத்தின் விடுதலை பற்றி அவர் நினைத்ததுண்டா?

அவர் நினைத்து நல்லது என உணர்ந்து செயல்படக் கூடத் தேவையில்லை; சீறி எழுந்து, நாறிப்போயிருக்கும் சமுதாயக் குட்டையைச் சீர்படுத்தி தனி அரசு அமைக்கும் தன்மான வீரர்களின் பாதையிலே தடைக்கல்லை உருட்டி விடாமலாவது இருக்கலாமே! மகாரியாஸ் பாதிரியார் அத்தகையோருக்குப் பாடமாக அமைவாரா? பாதை காட்டுவாரா? —(மா)

★

## ஏன்? எதற்காக?

★★★ எப்படியோ பட்ஜெட் ரகசியங்கள் குறிப்பிட்ட நாளுக்கு முன்பே ஊரறிந்த ரகசியமாகி விட்டன!

★ அதனுல் நாட்டுக்கு வந்த கேடு என்ன?

★ நிறைய உண்டு. பொறுப்பற்ற தன்மையைச் சுட்டிக் காட்டி இந்த அரசாங்கம் தன்னுடைய பலஹீனத்தை வெளிப் படுத்திக் கொண்டிருக்கிறது.

★★ அது மட்டுமா? ஏராளமான நஷ்டம்கூட ஏற்பட்டிருக்கிறது, ரகசியங்கள் அம்பலமேறியதால்!

★ சுமார் ஒரு கோடி ரூபாய் வரை பம்பாய் மார்க்கெட்டிலே ஒரே ஒரு 'பண மூட்டை'யால் சுருட்டப் பட்டிருக்கிறதாம்!

★ பட்ஜெட் காரணமாக புது வரி விதிக்கப்படப் போவதாகத் தெரிந்த பொருள்கள் யாவும் முன் கூட்டியே பதுக்கப் பட்டிருக்கின்றன! இதனுல் அரசாங்கக் 'கஜானு'வுக்கு வரவேண்டிய பொருள் வியாபாரப்பெருச்சாளிகளின் வயிற்றுக்குக் குடிபோயிருக்கிறது! பொறுப்புள்ள எந்த அரசாங்கம்தான் இந்தச் செயலை அனுமதிக்க முடியும்?



★★★ ஆனுல் இவ்வளவும் வெட்ட வெளிச்சமான பிறகும்கூட நேருப் பண்டிதரோ புண்ணுக்குப் புனுகு தடவும் வேலையில் ஈடுபட்டிருக்கிருர்.

★ பட்ஜெட் ரகசியங்கள் வெளியானதால் பாதகம் ஏற்பட்டு விடவில்லை என தேஷ்முக்கின் மேல் விழுந்திருக்கும் ஆபத்தை அப்பால் தள்ள முனைகிருர், அது எத்தகைய அரசியல் அநாகரிகம் என்பதை உணராமல்!

★★★ பாதகம் ஏற்பட்டால் என்ன; ஏற்படாவிட்டால் தான் என்ன—பட்ஜெட் ரகசியம் அணுவளவு வெளியானது தெரிந்ததும் வெளி நடக்க வேண்டியதுதான் நிதி அமைச்சர் செய்யவேண்டிய கண்யமான செயல்!

★ ஏன், அப்படி?

★ நிதி இலாக்காவின் தலைவர் நிதி அமைச்சர்தான்; அந்த இலாக்காவின் குற்றங் குறைகளுக்கு பொறுப்பாளியும் அவரேதான்!

★ அதோடு, பட்ஜெட் ரகசியங்களைப் பாதுகாப்பது நிதி அமைச்சர் என்பவரின் தலையாய கடமையாகும்!

★★ அதன்படி தேஷ்முக் பொறுப்பற்ற தன்மையோடு நடந்துகொண்டிருக்கிருர்; கடமை மறந்தவர் என்ற மகத்தான குற்றத்துக்கும் ஆளாகியிருக்கிருர்.

★★ "ஆமாம்; அந்த இலாக்காவில் பணியாற்றும் வேறு யாராவது ஒரு உத்யோகஸ்தர் இதற்குக் காரணமாயிருந்தால், அதற்கு தேஷ்முக்கா பலியாக வேண்டும்?" இப்படியும் கேள்வியெழுப்பத் தோன்றும்.

★★★ ஆம்; அப்படித்தான்! நெஞ்சிலே நச்சுக் கருத்தும், நாட்டுக்குத் துரோக நினைப்பும் கொண்ட உத்யோகஸ்தன் கையில், எல்லாம் தெரிந்த நிதியமைச்சர் எப்படி நம்பிக்கை வைக்கலாம்? இது மாபெரும் தவறல்லவா?

★ அதனுல்தான் அரசியல் கண்யம் நிதி அமைச்சரின் வெளி நடப்பை வற்புறுத்துகிறது!



5565



### சிந்தனையாளர் அரிஸ்டாடில்

ஆசிரியர்: கிருஷ்ணன் பாலா

சிந்தனையாளர் வரிசை என்ற தொடரிலே பிரேமா பிரசுரத்தினர் தமிழகத்துக்கு மேல் நாட்டு அறிஞர் பெரு மக்களின் வாழ்க்கை வரலாற்றினையும், ஆய்வுரைகளையும் அறிமுகப்படுத்தி வைக்கின்றனர். அவைகளுள் ஒன்றுதான் கிருஷ்ணன் பாலா எழுதியிருக்கும் அரிஸ்டாடில்! அவனுடைய சிந்தனை விளக்கமும், அவன் எழுதிய நூற் சுருக்கங்களும் நல்ல முறையில் தொகுக்கப் பட்டிருக்கின்றன.

அரிஸ்டாடிலை சாக்ரட்டீஸிலிருந்தே துவங்கி விவரித்திருப்பாரேயானுல், கிரேக்க வரலாற்றுக்குப் புதியவர்கள் சீக்கிரம் புரிந்து கொள்ள ஏதுவாய் இருந்திருக்கும்.

ஐரோப்பிய அரசியல் தத்துவத்துக்குத் தந்தை என்று கருதப்படும் அரிஸ்டாடில் எல்லோரும் தெரிந்து கொள்ள வேண்டிய பேராசிரியன் என்ற முறையில் இந்தப் புத்தகம் முக்கியத்துவம் பெறுகிறது.

கிடைக்குமிடம்:
பிரேமா பிரசுரம், சென்னை-24.
விலை: ரூ. 1-4-0.

★

### இலாகிரிப் பொருள்களா? எம தூதர்களா?

இயற்றியவர்:
சு. அ. இராமசாமிப் புலவர்.

இலாகிரிப் பொருள்கள் நிச்சயமாக 'எமதூதர்கள்'தான்! அதையே பல அறிஞர்களின் பொன் மொழிகளுடன் தந்திருக்கிருர் ஆசிரியர். மருத்துவ நிபுணர்களின் கருத்துகளும் அடங்கியிருக்கின்றன!

கிடைக்குமிடம்:
பிரேமா பிரசுரம், சென்னை-24.
விலை: ரூ. 1-8-0.

✶

### பாரதியார் கவிதைகள்

பிராட்வேயிலிருக்கும் முரசொலிப் பதிப்பகத்தார் இந்த அரிய நூலை வெளியிட்டிருக்கின்றனர். பெரிய எழுத்துக்களில், நல்ல முறையில் புத்தகம் அமைந்திருப்பது பற்றி வெளியீட்டாளர்கள் நம் பாராட்டைப் பெறுகிருர்கள்! தமிழர் இல்லந்தோறும் இருக்க வேண்டிய நூல்!

கிடைக்குமிடம்:
முரசொலிப் பதிப்பகம்,
பிராட்வே, சென்னை-1.
விலை: ரூ. 5-0-0

### தாலாட்டு

தொகுப்பாசிரியர்: தமிழண்ணல்.

தொகுப்பாசிரியர் தோழர். தமிழண்ணலின் முன்னுரையுடன் துவங்கும் இந்த நூலிலே பிள்ளைக்கனி அமுதிற்கு தமிழ் வழங்கும் பற்பல பகுதிகளிலே வாழ்வோர் இலக்கியச் சுவை நனி சொட்டச் சொட்டச் சூட்டியிருக்கும் கவிதை மலர்கள் அழகிய முறையில் இடம் பெற்றிருக்கின்றன. தமிழகத்தின் நடோடி இலக்கியத்தில் இந்தப் புத்தகம் ஒரு நன் முத்தாகத் திகழுமென்று நம்புகிருேம்.

கிடைக்குமிடம்:
செல்விப் பதிப்பகம், காரைக்குடி
விலை ரூ. 2-0-0.

✶

### 'சூரக்கோட்டை மர்மம்' 'மாய மனிதர்கள்'

ஆசிரியர்: "மேதாவி"

பொதுவாகத் துப்பறியும் கதைகள் கருத்துக் களஞ்சியங்களாக இருக்க முடியாவிட்டாலும், அவை அரிய பொழுது போக்குச் சாதனங்களாகும். அந்த முறையில் ஆசிரியர் "மேதாவி"யின் இரு நாவல்களும் கதைப்போக்கில் மயங்குதல் இன்றி, நல்ல முறையில் உணர்ச்சி குன்ருமல் எழுதப் பட்டிருக்கின்றன.

வெளியீடு: பிரேமா பிரசுரம். சென்னை-24.

விலை- முறையே ரூ. 1-8-0.
ரூ. 1-4-0.

✶

★

**'முரசொலி'**

**இலங்கைத் தோழர்களுக்கு:**

| | |
|---|---|
| ஆண்டு சந்தா | 6-0-0 |
| 6-மாத சந்தா | 3-8-0 |

இலங்கை நேயர்களிடமிருந்து வி. பி. பி. மூலம் சந்தா தொகை பெற்றுக் கொள்ள இயலும்.

**வெளிநாடு**

| | |
|---|---|
| ஆண்டு சந்தா | 7-0-0 |
| ஆறுமாத சந்தா | 4-0-0 |

மலேயா நேயர்கள், சந்தா தொகைக்கு 'கிராஸ்' செய்த பிரிட்டிஷ் போஸ்ட்டல் ஆர்டர்கள் அனுப்ப வேண்டுகிருேம்.

★



பொதுச் செயலாளரும், துணைச் செயலாளரும் மேடையில் அமர்ந்திருக்க—சொற்பொழிவுக்கென அமைக்கப்பட்ட தனி மண்டபத்தில் கருத்துக்கனி உதிர்க்கிருர் திராவிடத்தின் காவலர்.

(புகைப் படங்கள்: திருமலை)

★

## உங்கள் பார்வை!

### விஞ்ஞானத்தைப் பேணும் விந்தையோ விந்தை!

காஞ்சிபுரம்,
10—3—56

ஆசிரியர் அவர்களுக்கு,

அண்மையில் டில்லியில் நடந்த இந்திய வர்த்தக சபைக் கூட்டத்தில்உரையாற்றிய நேரு பண்டிதர், "உலகத்தின் எதிர்காலம் அரசியல்வாதிகளின் கையிலும், வியாபாரிகளின் கையிலுமில்லை. ஆனுல் விஞ்ஞானிகளின் கையில்தானிருக்கிறது" என்ற உண்மையை உதிர்த்திருக்கிருர். மகிழ்ச்சிக்குரிய செய்தி!

நாட்டின் முன்னேற்றம் நாடாள்வோரின் கையில் கிடையாது: அதற்கு விஞ்ஞானிகள் தேவை. உணர்கிருர் பண்டிதர்! ஆனுல் அவர் செயலிலே செய்தது என்ன?

குடிசைத் தொழிலுக்காக கோடிக் கணக்கான ரூபாய்களை கொட்டியழும் நேரு—கதர் அபிவிருத்தித் திட்டத்திலே கணக்கற்ற பணத்தைப் பாழாக்கும் பண்டிதர்—சென்னையில் நிறுவப் போகும் அப்பளத் தொழிற்சாலைக்கு ஐந்தாண்டுத் திட்டம் போடும் பிரதமர்—தென்னுட்டில் விஞ்ஞானத்தை வளர்க்க விவேகமான செலவு செய்ததாகக் கூற முடியுமா?

கொங்கு நாடு பெற்றெடுத்த கோவைச் சீமான் — விவசாயக் கல்லூரியும் வியக்குமளவு பதினுறு கதிர்களைத் தாங்கி நிற்கும் சோளப் பயிரை விளைவித்து இயற்கையை வென்ற அதிசயச் செயல் வீரன்— இயந்திர உற்பத்தியில் பிறநாட்டைப் போட்டிக் கழைக்கும் வாய்ப்பை நோக்கி நிற்கும் "மோட்டார் மன்னன்"— விஞ்ஞானத்தை வீட்டிலேயே வளர்த்து, அதன் வெற்றியை இந்நாநிலம் பயன் படுத்தாது கண்டு மனம் புழுங்கும், விஞ்ஞானி ஜி. டி. நாயுடு அவர்களை முதுமை விரட்டிக் கொண்டு வருகிறது. அவரது ஆற்றலைப் பயன் படுத்த ஆளும் கட்சி அக்கரை காட்ட மறுக்கிறது! விஞ்ஞான வேட்கை கொண்டுள்ள வாலிபர்கள் ஏங்கித் தவிக்கின்றனர். அவர்களது அறிவைக் கூராக்கும் சாணைக்கல் நாயுடுவிடம் இருப்பதை நாடு நன்கறியும்.

தமிழ்நாடு தந்த ஜி. டி. நாயுடு விந்தியத்திற்கு வடக்கே பிறந்திருந்தால் ஒரு மைக்கேல் பாரடேயாக, தாமஸ் ஆல்வா எடிசனுக, மார்க்கோனியாக, அலெக்சாண்டர் பிளமிங்காக, ஐசக் நியூடனுக, ஜகதீஸ் சந்திர போஸாகப் போற்றப் பட்டிருப்பார். அல்லது மாம்பலத்திலோ, மயிலையிலோ பிறந்திருந்தால் சி. வி. ராமனுகவேனும் இருந்திருப்பார் என்பதில் எள்ளளவும் ஐயமில்லை. ஆனுல் பாவம் அவரோ திராவிட சமுதாயத்திலே பிறந்து விட்டார்! அந்தத் 'தவறே' டில்லி ஏகாதிபத்தியத்தின் கண்களை மறைக்கிறது!

அன்பன்,
எஸ். டி. தீன்

## விருதுநகரார் 'வீராவேசம்'...

★ 2-ம் பக்கத் தொடர்ச்சி

சைமன் கமிஷன் பகிஷ்காரத்தின்போது லாலா லஜபதிராயை தடியால் அடித்த போலீஸ்காரனை துப்பாக்கியால் சுட்டுக் கொன்றார்களே; அப்படிச் செய்வதுதான் போராட்டம் என்கிறீர்களா?

சட்ட மறுப்பு இயக்கம் ஆரம்பமான நேரத்தில் சிட்டகாங் ஆயுதச் சாலையில் பெருங் கொள்ளை நடத்தப் பட்டதே; அதைத்தான் உமது அகிம்சா இதயம் போராட்டம் என்று ஒத்துக் கொள்ளுமா?

ஆகஸ்ட் கலவரத்தின் போது நாடெங்கும் நாசத்தை நர்த்தனமாட விட்டீர்களே; அதுதான் உண்மையான போராட்டத் திட்டமா?

—அர்த்தாலைப் போராட்டமென நம்ப மறுக்கும் காமராசர், அரசாங்கத்தின கவனத்தைக் கவர்வதற்கு எந்தக் கருவியைத் தேர்ந்தெடுக்கச் சொல்லுகிறார்?

"தமிழ் நாட்டுக்கு ஆபத்து வந்து விட்டதாக ஹர்த்தாலுக்கு ஏற்பாடு செய்தவர்கள் கூறுகிறார்கள். நானும் சிந்தித்துப் பார்த்தேன். அப்படி ஆபத்து எதுவும் வந்து விட்டதாகத் தெரியவில்லை. தமிழ் நாட்டிற்கு எந்த விதமான ஆபத்தும் ஏற்பட்டு விடவில்லை"

—இதுவும் காமராசர் வாசகம் தான்!

கண் அனைய தேவிகுளம், பீர்மேடு கைவிட்டுப் போய் விட்டது!

செங்கோட்டையின் ஒரு பகுதியைத் துண்டாடி யிருக்கிறார்கள், தூய்மையற்ற துரைத்தனத்தார்!

—இதைவிட வேறென்ன வேண்டும் மானமொன்றே நல்வாழ்வெனக் கொண்ட மறத் தமிழன் புலியாக மாறுவதற்கு?

நம் கையிலே இருக்கவேண்டிய கனியைப் பிடுங்கியிருக்கிறார்கள்; தமிழன்னையின் மெய்யிலே கிடக்க வேண்டிய அணியைப் பறித்திருக்கிறார்கள். — பதறாதா தமிழ் நெஞ்சம்? துடிக்காதா வீரத் தோள்கள்?

—இருந்தும் தமிழகத்துக்கு ஆபத்து வரவில்லை யென்கிறாரே, காமராசர்; அந்தக் 'குருட்டுக் கண் படைத்தவருக்கு நாம் நடந்த காட்சியை எப்படிச் சுட்டிக் காட்டுவது?

திரு—கொச்சி பிரதேசத்திலே காங்கிரஸ் ஆட்சி கவிழ்ந்து விட்டது, உட்பூசல காரணமாக!

அடக்குமுறை தர்பாரிலே ஆச்சாரியாரையும் மிஞ்சி நிற்கும் பட்டம் தாணுப் பிள்ளைக்கே மறுபடியும் பதவித்துண்டம் வீசப் படுமென்று தெரிகிறது!

தேவிகுளம், பீர்மேடு பகுதிகளில் முன்பே ஏராளமான மலையாளிகளைக் கட்டாயமாகக் குடியேற்றி, வாக்கெடுப்பென ஒன்று ஏற்பட்டால் அப்போது மலையாளிகளை மெஜாரிட்டியாக்க சூதுத் திட்டம் வைத்திருந்த சூன்யக்காரர், அவர்!

அவர் பதவிக்கு வந்தால் நாம் இழந்த பகுதிகளுக்கு இன்னும் அல்லவா ஆபத்து அதிகமாகிறது!

—இதை உணர்ந்து பார்க்காமல் ஏன் ஊமை வேஷம் போடுகிறார் அமைச்சர்?

முடிவுரையில் கூறுகிறார் அவர்:

"உண்மையில் (தமிழ் நாட்டைப் பிரித்துவிட வேண்டுமென்று) உறுதியான எண்ணமிருக்குமானால் அவர்கள் அதைப் பகிரங்கமாக பொது மக்களிடம் சொல்ல முற்பட வேண்டும்."

—அறைகூவல் விட்டிருக்கிறார் கரைந்து வரும் காங்கிரசின் தலைவர்!

காமராசரே! கல்லூரி மேடையில் கட்சி 'அரசியல் பேசிடும் அறிஞரே'! எங்கள் உறுதியான எண்ணத்தை மக்கள் மன்றத்திலே ஆணித்தரமாக எடுத்து வைக்கத்தான் போகிறோம்!—

திருச்சியிலே கூட இருக்கும் மாநில மாநாடு முடிவெடுக்கட்டும்—தேர்தல் களத்திலே, முடை நாற்ற மெடுக்கும் உமது கருத்துக்களுக்கும், அதில் உருவாகும் உளுத்துப் போன திட்டங்களுக்கும் சரியான முடிவு கட்டுகிறோம்.

★

"இந்தக் கண்ணியம் மிகுந்த கூட்டணியைக் கண்டு திகில் கொண்டு, கூட்டணிமீது மெத்தக் கோபம் கொண்டிருக்கிறார்—சென்னை மாநிலத்தை ஆள்வதாக எண்ணிக் கொண்டிருக்கும் காமராசர்! அவரது கோபத்தைப் பார்த்து நான் சிரிக்கிறேன்; அவரது கோபத்தை நான் துச்சமென மதிக்கிறேன்—அவரது போக்கை தமிழ் நாட்டார் ஏற்றுக் கொள்ளவில்லை என்பதைக் கடந்த பிப். 20-ல் தெளிவாக எடுத்துக் காட்டியிருப்பதால்!"

## பிறைவானம்......

★ 11-ம் பக்கத் தொடர்ச்சி

இல்லை; அழுக்கடைந்த தலைப்பாகை இல்லை; ஜமீன்தார் வாங்கித் தந்த புதிய ஆடைகள்தான் தோன்றின.

ஆனால் அவரது முகத்திலே மட்டும் ஏனோ சோகத்தின் சாயல் படிந்திருந்தது.

"வாத்தியாரய்யா! வேட்டை நாய் பாத்தீங்களா? ராஜபாளையத்திலேயிருந்து முதலாளி ஐயா வரவழைச்சது!" என்று சொல்லிக் கொண்டே வந்தான் தோட்டக்காரன்.

ஆசிரியருக்கு 'சுருக்' கென்றது. மறுகணம் அவரது மனம் கிராமத்துப் பள்ளிக்கூடத்துக்கு ஓடியது. படிப்பிலே புலி—எல்லையில்லா ஆசை—ஆனால், சுட்டித்தனம் கொண்ட ஏழை முத்து—'ஆனா ஆவன்னா' என்ற பிஞ்சு வாய் திறந்து மழலை உதிர்க்கும் மாணிக்கச் சிறார்கள்—கையிலே பையெடுத்து பையப் பைய நடந்து செல்லும் அந்த வருங்கால மேதைகளின் கபடில்லா சிரிப்பு—ஆசிரியர் நினைத்தார்!

அவர்களுக்கு கல்வியிலே விழி ஓட்டி வழி காட்டிய நான் இன்று அங்கில்லையே! அவர்களின் கதி! தாயற்ற சேய்களைப் போல தவித்து நிற்பார்களே!-மீண்டும் நினைத்தார்!

ஐயோ, நான் செய்தது பெரும் பாவம்; அந்த பிள்ளைக்கனி அமுதங்களுக்கு பெரும் துரோகம் இழைத்து விட்டேன்!-மீண்டும் மீண்டும் நினைத்தார்!

அப்போது,"என்ன சுந்தரம் சார், சௌக்கியமா?" என்று கேட்டுக் கொண்டே வந்தார் ஒருவர்.

"என்ன மாயாண்டி, எப்ப நீ ஊரிலேயிருந்து வந்தே? ஆமாம்; கிராமம் எல்லாம் எப்படி இருக்கு?" என்று கேட்டுக் கொண்டே அவரிடம் ஓடினார் ஆசிரியர். அவர் சுந்தர வாத்தியாரின் பழைய ஊர்க்காரர்.

"என்ன வாத்தியாரய்யா! நீங்க வந்தாலும் வந்தீங்க, கிராமத்துப் பசங்க ரொம்ப கெட்டுப் போயிட்டானுங்க! மாங்கா அடிக்கிறது, குளத்திலே குதிக்கிறது, ரொம்ப மோசம் போங்க! எல்லாம் கெட்டுப்போச்சு! ஆனால் அந்த முத்துப்பய மட்டும் தான் [illegible]லவன..."

"என்ன, என்ன? முத்து எப்படியிருக்கான்?"

"தெரியாதா உங்களுக்கு! பாவம், காலராவிலே அவுங்க அப்பன் திடீர்னு செத்து விட்டான். அவன் ஓயாம அழுதுகிட்டே யிருக்கான். ஊர் சுவத்துலே எல்லாம் எழுதி வச்சிருந்தானே, வேட்டை நாய், வேட்டை நாயின்னு—அதையெல்லாம் அவனே அழிச்சுட்டான். நேத்துகூட என்னைக் கேட்டான், 'சுந்தர வாத்தியார் எங்கே போய் விட்டார்? நான் அவரு கிட்டே போகனும்' னு. பாவம்...அந்தப் பள்ளிக்கூடக் கொட்டகையைப் பார்க்கவே பரிதாபமாயிருக்கு"—வந்தவர் சொல்லிக் கொண்டே யிருந்தார்.

"நிறுத்து மாயாண்டி" என்று கத்தினார் ஆசிரியர். வேக வேகமாக வீட்டுக்குள்ளே ஓடினார். ஏனோ, ஏதோ என்று புரியாத மாயாண்டி தன் வழியே நடந்தார்.

★

பழைய கிழிந்த கோட்—அழுக்குத் தலைப்பாகை—இந்தக் கோலத்தோடு, குப்புறப்படுத்து அழுது கொண்டிருந்த தன்னைத் தட்டி எழுப்பிய சுந்தர வாத்தியாரைக் கண்டதும் திடுக்கிட்டு விட்டான் முத்து.

"என்னடா பாக்கிறே? நான் தாண்டா வேட்டை நாய்! வாடா பள்ளிக் கூடத்துக்கு!" என்று அழைத்தார் அவர். முத்து விம்மி விம்மி அழுதான். அவர் பின்னே நடந்தான்!

குழந்தைகளின் கண் திறக்கும் மாளிகையாம் அந்தப் பள்ளிக்கூடம் மீண்டும் திறக்கப்பட்டது.

அன்று மாலை...

பள்ளி முடிந்தது. சுந்தர வாத்தியார் பெருமிதத்தோடு தனது குடிசை வீட்டுக்கு நடந்து கொண்டிருந்தார்.

"டேய், பாத்தியாடா சோனி! என்ன இருந்தாலும்நம்ப வேட்டை நாயுக்கு நல்ல குணம்டா. மறுபடியும் நம்ம கிட்ட வந்துட்டது, பார்!" என்று முத்து எந்தப் பையனிடமோ சொல்லிக் கொண்டிருந்தது அவர் காதுகளில் விழுந்தது.

சுந்தர வாத்தியார் பேசாமல் நடந்து கொண்டிருந்தார்.

—சொர்ணம்

## சிறப்புக் கூட்டம்

18-3-56 ஞாயிறு காலை 9 மணிக்கு
: திருச்சி தேவர் மன்றத்தில் :
தலைவர் : அ. பொன்னம்பலனார்
பேசுவோர் :
**மு. கருணாநிதி**
**கவிஞர் கண்ணதாசன்**
இ. எம். ஹனீபா குழுவினருடன் இன்னிசை வழங்குவார்
நன்கொடை அணா 4.
நகர தி. மு. க. திருச்சி.

அன்று மாலை 6-மணிககு டவுன்ஹால் மைதானத்தில். சர்வகட்சிக் கூட்டத்தில் மு. கருணாநிதி பேசுவார்.





# பிறை வானம்

...பிள்ளைகள் பகுதி...

## "வேட்டைநாய்"

"ஆசிரியர் வேலை ஒரு வேலையா? மகா கேவலம்! ஆண்டுதோறும் எத்தனையோ பையன்களுடன் பழகுகிறோம்; படிக்க வைக்கிறோம்; பக்குவப்படுத்தி மேலே அனுப்புகிறோம். ஒவ்வொருவரும் பி. ஏ., எம். ஏ., என்று பட்டங்கள் பெற்று, ஆயிரமாயிரமாக சம்பாதிக்கிறார்கள். ஆனால், ஆசிரியர்களோ...! அவர்களை எல்லாம் ஏற்றிவிட்ட அந்த 'ஏணி' கவனிப்பாரற்றே கிடக்கிறது!"

நூல் போட்டுக் கட்டிய மூக்குக் கண்ணாடி, கிழிந்துபோன கோட்டு, அழுக்கடைந்த தலைப்பாகை—இந்த தன்னுடைய கோலத்தைப் பார்க்கும்போதெல்லாம் இப்படித்தான் நினைத்தார் சுந்தர வாத்தியார்!

சுந்தர வாத்தியார் என்ன, இன்று—நேற்று வாத்தியாரா? குடுமி வைத்துக்கொண்டிருந்த காலம் முதல், தலை முழுதும் வழுக்கை விழுந்த கிழவராகிவிட்ட இன்று வரை அவர் வாத்தியார்தான்! ஆண்டுதோறும் அவரிடம் அடிபட்டு—அறிவு பெற்று வேறு ஊருக்குப் படிக்கச்சென்ற சிறுவர்கள் ஏராளம்! ஆனால் அவரது கோலமோ—படு மோசம்தான், பரிதாபம்தான்!

அன்றொரு நாள்...

மூக்குக் கண்ணாடியை துடைத்துப் போட்டவண்ணம் பள்ளிக்கூடத்தை நோக்கி நடந்து கொண்டிருந்தார். பள்ளி என்றதும் பல அடுக்கு மாடிகளைக் கொண்ட மாளிகை என்று எண்ணிவிடாதீர்கள். சாதாரண கீற்றுக் கொட்டகைதான். கிராமத்துப் பள்ளிதானே!

"ஐயா..."—அப்போது நடுங்கிய குரலோடு அவரை நெருங்கி வந்தான் ஒரு சிறுவன்.

"யாரப்பா நீ?என்னவேண்டும்?" என்று கேட்டார் சுந்தர வாத்தியார்.

"பள்ளிக்கூடத்து ஆசிரியரிடம் என்ன சார் கேட்பது? பணமா கேட்பேன்? என் பேரு முத்து சார்! நல்ல பையன் சார்! வேண்டியது 'படிப்பு' சார்!"—என்றான் அவன்.

குறும்புக்காரன் போலும், சிரித்துக்கொண்டே பேசினான்.

"அதற்கென்னடா, பள்ளிக்கூடத்துக்கு வாயேன்!" என்றார் ஆசிரியர்.

"அது சரி சார்! ஆனா எங்கப்பா படிக்கக் கூடாதுங்கிறாரு சார். மாடு மேய்க்க வேற ஆள் இல்லையாம்; அதுக்காக என் ஆசையைக் கெடுக்கலாமா சார்?"—சிரித்தவன் முகத்தில் இப்போது சற்று கவலை தெரிந்தது.

ஆனால், சுந்தர வாத்தியார் அவனுக்கு ஆறுதல் தந்தார். அவனது அப்பாவை,தானே சமாதானப்படுத்துவதாகவும் சொன்னார்.

அவர் வழிகாட்ட அவன் பின்னால் சென்றான்.

பள்ளி நடந்தது. ஆசிரியர் தமிழ் கற்றுத் தந்தார்; பூகோளம் சொன்னார்; சரித்திரம் படித்தார்!

"டேய், ஹைதர்அலி காலத்திலே இந்தியாவில் நடந்த நிகழ்ச்சி என்ன?" என்று கேட்டார், ஆசிரியர்.

"உங்களுடைய கோட்டு தைத்ததுதான் சார்!" — 'டக்'கென்று பதில் வந்தது.

சொன்னவன் வேறு யாருமல்ல; அவர் அழைத்து வந்தாரே, அந்த முத்துவேதான்!பையன்கள் 'கொல்' லென்று சிரித்தார்கள்.

ஆசிரியருக்கு கோபம் வந்துவிட்டது. "ஏய், பெஞ்சிமேல ஏறி நில்லு!" என்றார்.

"கூரையிலே தலை இடிக்குமே சார்! கூரையைப் பொத்து, தலையை வெளியே வச்சுக்கட்டுமா, சார்?"—என்றான் அவன் கொஞ்சமும் தயங்காமல்!

அவருக்கு எப்படியிருக்கும்? கையிலிருந்த பிரம்பை சுழற்றிக் கொண்டு அவன்மேல் பாய்ந்தார். ஆனால், பாவம்,முதல் நாளல்லவா—என்ற நினைவு வந்துவிட்டதோ என்னவோ அடிக்கவில்லை. ஆனால் திட்டினார்; கண்டபடி திட்டினார்; அவன் கண்களிலே நீர் மல்கும் அளவுக்குத் திட்டினார்.

முத்து வாயைத் திறக்கவில்லை. பள்ளிக்கூடம் முடிந்தது. சுந்தர வாத்தியார் வேகவேகமாக வீட்டை நோக்கி நடந்தார். அப்போது திடீரென்று பின்னாலிருந்து "வேட்டை நாய்" என்றொரு குரல் கிளம்பியது. அவர் பயந்துபோய்விட்டார். ஏதேனும் வேட்டை நாய்தான் வந்துவிட்டதோ என்று நடுங்கிப் பாய்ந்தார். அதே சமயம் 'கலகல'வென சிரிப்பு சத்தம் காதைப் பிளந்தது. அவர் திரும்பிப் பார்த்தார். "வேட்டை நாய் பாயப் பார்க்குதுடோய்!" என்று கத்திக்கொண்டே ஓடினான் ஒரு சிறுவன். அவன் வேறு யாருமல்ல; முத்துவேதான்! மறு கணம் "வேட்டை நாய், வேட்டை நாய்!" என்று கத்திக்கொண்டே மற்ற பையன்களும் பஞ்சாய்ப் பறந்து ஓடினார்கள்.

புரிகிறதா? சுந்தர வாத்தியாருக்குப் புதிய பட்டம்—காரணப் பெயர் சூட்டிவிட்டான் முத்து!

அவருக்கு என்ன செய்வதென்றே புரியவில்லை. 'நாளைக்கு பார்த்துக் கொள்ளலாம்' என்ற முடிவோடு, பள்ளிக்கூடத்தினும் கேவலமாகத் தோன்றிக்கொண்டிருந்த தனது ஓட்டை வீட்டை நோக்கி நடந்தார்.

ஓட்டை வீடுதான்! அவர் என்ன செய்வார்? ஏழை ஆசான்தானே! அவருக்குவரும் சம்பளமோ ஐம்பது; அதில் பிழைக்க வேண்டிய உயிர்களோ அவரையும் உள்ளிட்ட பத்து பேர்! நினைக்கவே பயமாக இருக்கிறதே—இந்த நிலையில் அவருக்கு கிழிந்த கோட்டையும், அழுக்கடைந்த தலைப்பாகையையும் தவிர வேறு என்ன கிடைக்கும்?

★

மறு நாள்...

சுந்தர வாத்தியார் வகுப்பில் நுழைந்தார். அங்கே அமைதி—ஆச்சரியமான அமைதி! ஒரு சமயம் முத்து இல்லையோ என்று பார்த்தார் அவர். அவன் 'ஏதுமறியாதவன்' போல தலையைக் குனிந்தபடியே படித்துக்கொண்டிருந்தான்.

"டேய் முத்து, நேற்று..."—என்று கோபமுடன் தொடங்கிய ஆசிரியர் 'டக்'கென்று நிறுத்தி விட்டார். 'வேட்டை நாய் என்று என்னை ஏன் கூப்பிட்டாய்?' என்று கேட்டு,அதை தன் பெயராகத் தானே ஏன் நிலை நிறுத்திக்கொள்ள வேண்டும் என்று நினைத்தார்.

"நேற்று...ஆமாம் சார்! நேற்று கொடுத்த வீட்டுக் கணக்கெல்லாம் சரியா போட்டுட்டேன் சார்! இதோ!" என்றபடியே நோட்டை எடுத்துக் காட்டினான், முத்து.

அவர் பார்த்தார். முத்துமுத்தான எழுத்துக்களில், அடித்தல் திருத்தலின்றி கணக்கை சரியாகப் போட்டிருந்தான் பொல்லாத முத்து. அவருக்கு ஆச்சரியம்!

"சரி, இந்தக் கேள்விக்குப் பதில் சொல். லட்சத் தீவுகள் எங்கே, எப்படி இருக்கின்றன?" என்றார்.

"அதுவா சார்...லட்சத் தீவுகள் உங்க கோட்டிலே கிழிசல்கள் இருக்கிறதைப்போல திட்டுத் திட்டாக..." —முத்து முடிக்கவில்லை. மறுகணம் அவன் முதுகில் 'சுரீர்' என்ற ஒரு அடி விழுந்தது. மீண்டும் மீண்டும் விழுந்தது. முத்து 'ஐயோ' என்று அலறினான். தன் கடமையைச் செய்துவிட்ட பிரம்பு சுந்தர வாத்தியாரின் கையில் கம்பீரமாக இருந்தது.

"போடா இடத்துக்கு! இனிமே இப்படிக் குறும்புத்தனம் பேசினே, தோலை உரிச்சுடுவேன், ஜாக்கிரதை!" என்று உறுமினார் சுந்தர வாத்தியார்.அவர்கண்கள் கோவைப் பழம்போல சிவந்து விட்டிருந்தன. முத்து அழுதுகொண்டே தன் இடத்திற்குப் போனான். அன்று முழுதும் அவன் வாயைத் திறக்கவேயில்லை.

பள்ளிக்கூடம் முடிந்தது. வீட்டை நோக்கி நடந்த ஆசிரியரின் பின்னால் "வேட்டை நாய் — வேட்டை நாய்" என்ற குரல்கள் கிளம்பின. அவர் எதிர்பார்க்கவே இல்லை; திரும்பிப் பார்த்தார். யாரும் தென்படவில்லை. பள்ளிக்கூட வாசலில் இருந்த மாமரத்து உச்சியிலே—இலை கிளைகளுக்கு மத்தியிலே—முத்துவின் சிவப்பு சட்டை மட்டும் தெரிந்தது. அத்துடன் "என்ன வேட்டை நாய் பாக்கிறே?" என்ற சத்தமும் எழும்பியது. அவர் என்னசெய்வது? பேசாமல் வேகவேகமாக நடந்தார், "வேட்டை நாய் டோய்!-வேட்டை நாய் டோய்!" என்ற பின்னணி இசையோடு!

★

மறு நாள்...சுந்தர வாத்தியார் பள்ளியில் நுழையும்போதே வகுப்பில் ஒரே சிரிப்பு! அவர் என்ன, ஏது என்று புரியாமல் திகைத்தார். தற்செயலாக கரும்பலகையை கவனித்தார். அதில்... 'கோபாதிகோப—கோப கம்பீர—கோப மார்த்தாண்ட—வேட்டை நாய் பராக்! பராக்!!' என்று எழுதியிருந்தது. எழுத்து முத்துவினுடையதுதான்! அப்புறமென்ன? முத்து அன்று சித்திரவதைதான் பட்டான்.

அன்று பள்ளி முடிந்து வீட்டுக்குத் திரும்பியபோது, வீட்டிலே அவருக்கு ஒரு ஆச்சரியம் காத்திருந்தது. வீட்டில் உள்ளவர் அத்தனை பேரும் சிரித்த முகத்தோடு இருந்தார்கள். அது அதிசயம்தானே!- 'காரணம் என்ன?' என்று கேட்டார் ஆசிரியர். ஒரு கடிதத்தைக் கொடுத்தார்கள். அதுதான் அத்தனை களிப்பைத் தூக்கி வந்திருக்கிறதோ!

பக்கத்து ஜமீன் ஒன்றிலே நல்ல வேலையில் இருக்கும் அவரது தம்பி எழுதியிருந்தார். அவர் படித்தார்.

"அன்புள்ள அண்ணா! உங்களுக்கு ஒரு மகிழ்ச்சியான செய்தி! இன்றோடு உங்கள் கஷ்டமெல்லாம் ஓடுகிறது. படியுங்கள், ஜமீன்தாரின் பிள்ளைகளுக்கு வீட்டோடு இருந்து படிப்பு சொல்லித்தர உங்களை ஏற்பாடு செய்திருக்கிறேன். தனி வீடு—எல்லா வசதிகள்—இத்துடன் நூறு ரூபாய் சம்பளம் வேறு பேசி விட்டேன். உடனே வேலையை விட்டு விட்டு வந்து சேரவும். வயதான காலத்திலாவது மகிழ்ச்சியுடன் இருக்கலாம்.

படித்து முடித்தார்.

"இன்னைக்கே புறப்பட வேண்டியதுதானே!" என்று துரிதப்படுத்தினாள் மனைவி.

சுந்தர வாத்தியார் பேசாமல் இருந்தார். 'இத்தனை பையன்களையும் விட்டு விட்டா போவது?' என்ற நினைவு அவர் மனதில் எழும்பியிருக்கலாமோ — இருக்கலாம்; இருக்கலாம்; இல்லாவிடில் சுக வாழ்வு வலிய வரும்போது யோசனைக்கு ஏது இடம்?

"இதுதாண்டா நம்ப வேட்டை நாய் வீடு!"—தெருவிலே போய்க் கொண்டிருந்த இரண்டு பையன்கள் பேசிக் கொண்டு போனார்கள். அவருக்கு 'சுருக்'கென்றது. இந்த அவமானத்தை எப்படித் தாங்குவது? அத்தனை பேரையும் அடித்து அடக்குவதென்றால்தான் முடியுமா? அதற்கு ஒரே வழி; வேறு ஒன்றுமில்லை; உடனே பக்கத்து ஜமீனுக்குப் புறப்பட வேண்டியதுதான்! அவர் முடிவு செய்து விட்டார். மறுகணமே வீட்டைக் காலிசெய்யத் தொடங்கி விட்டார்.

★

ஒரு வாரம் சென்றது! ஜமீன்தாரின் மாளிகைக்குப் பக்கத்திலேயிருந்த புத்தம் புதிய வீட்டிலே நின்று கொண்டு வானத்தை வெறிக்கப் பார்த்துக் கொண்டிருந்தார் சுந்தர வாத்தியார். இப்போது அவர் உடம்பிலே பழைய கோட்

★ தொடர்ச்சி 10-ம் பக்கம்



ஜெயபால்; காரமடை.

(?) நேருவுக்கு வாரிசு உண்டா?

இல்லை; அவர் ஒரு 'அரசியல் மலடு'!

சம்மந்தம்; கோடவாசல்.

(?) காமராசர் சென்னைக் கல்லூரியொன்றில் உங்கள் கட்சியைத் திட்டினராமே?

இந்த வாரம் பரிசு பெறும் தோழர்:

(★) ஜீவா
திருவெண்காடு
(தஞ்சை மாவட்டம்)

ஆமாம்; சாவ கட்சிக் கூட்டணி கோட்டிய பெரு மழைக்காக சிறிது நேரம் லயோலாக் கல்லூரியில் ஒதுங்கினராம்;

கேசவன்; புனலூர்.

(?) எங்கும் நிறைந்த சர்வவியாபி யார்?

சி. ஐ. டி. போலீசார் என்கிறார் ஒரு சட்டசபை உறுப்பினர்.

நாகலிங்கம்; மேலூர்.

(?) விபச்சாரம் எப்போது தோன்றியது?

ஆரியர்களின் வரவிலிருந்தே அதைப்பற்றிய குறிப்பு இருக்கிறது! ரிக் வேதத்தில் சகோதரர்களை யிழந்த பெண்கள் விபச்சாரத்தைத் தொழிலாகக் கொள்வது வற்புறுத்தப் பட்டிருக்கிறதாம்! விஜய சாஸ்திய சமிதி விபச்சாரத்தை ஒரு நல்ல தொழிலாக அங்கீகரிக்கிறதாம்!

கிருஷ்ணசாமி; தஞ்சை.

(?) வரதராஜுலு நாயுடு யார்?

காங்கிரஸ் பானையிலே அவர் ஒரு ஊறுகாய்!

கோமேதகவேல்; பண்டலோயா.

(?) சென்னை முன்பு மீன் பிடிப்போர்வாழும் குப்பமாக இருந்ததாமே?

இப்போதுமட்டு மென்ன? பதவி மீன் பிடிப்போரைப் பொறுத்தவரை இன்றும் அப்படித்தான் காட்சியளிக்கிறது!

இராம. நடராசன்; சென்னை-14

(?) மாணவனுக்கும் அரசியலுக்கும் தொடர்பு எப்படியிருக்க வேண்டும்?

நாடோக்கும் படைக்கு மாணவன் ஒரு வளரும் சக்தியே தவிர பூரணத்துவம் அடைந்த போர்க்கருவி அல்ல!

கார்மேகம்; உசிலம்பட்டி.

(?) சுப்ரமணியனர் ஏன் தட்சிணப் பிரதேசத்தைப் பற்றித் திரும்பத் திரும்பப் பேசுகிறார்?

அரசியலில்கூட 'சேக்குமாட்டு' சுபாவம் சிலருக்கு வியாதியாக அமைந்து விட்டதே; அதனால் தான்!

சந்தானம்; வேதாரண்யம்.

(?) கண்ணீர்ப் புகை என்பது என்ன?

துப்பாக்கிப் பிரயோகத்துக்கு ஒரு முன்னுரை.

ராஜா; தென்கரை.

(?) காங்கிரஸ்காரர்கள் தங்கள் கதர்ச்சட்டைகளில் ஏன் பெரிய பைகளாக வைத்துக் கொள்கிறார்கள்?

இரண்டு ஐந்தாண்டுத் திட்டங்களில் அது ஒன்றுதான் நாடு கண்ட பெரிய முன்னேற்றம்!

ஜீவா; திருவெண்காடு.

(?) பண்டித நேரு தனது வாழ்க்கையில் உண்மையான காதலராக இருந்திருக்கிறாரா?

இல்லை; அப்படியிருந்தால் அவரால் உள்ளன்போடு நேசிக்கப்பட்ட ஷேக் அப்துல்லா இன்று சிறைச்சாலையில் வாழ நேர்ந்திருக்காதே!

க. கதிர்வேல்; வேலாங்கண்ணி.

(?) குழந்தைகள் என்பது என்ன?

இல்வாழ்க்கை என்னும் வாக்கியத்தை சுவையுள்ளதாக்கும் 'கமா'க்கள்; தொகை அதிகமானல் சலிப்பு ஏற்பட்டு விடுவதுமுண்டு!

அரு. கரிகாலன்; கீழச்சீவல்பட்டி.

(?) வினோபா பாவேயைப் பற்றி உமது கருத்து என்ன?

முதலாளித்துவமென்னும் 'மூட்டைப் பூச்சி'யை ஒழிக்க டி. டி. டி-யை உபயோகிக்காமல் மந்திரம் ஜபிக்கும் பூசாரியைப் போன்றவர்!

க. வெற்றிவேந்தன்; கோவை.

(?) மதுரையில் ஏன் பைத்தியக்கார விடுதியொன்றை ஏற்படுத்துகிறார்கள்?

ஒரு பைத்தியக்கார விடுதியைத் திறப்பது, அடிக்கடி உளறிக் கொட்டும் கனம்களின் எண்ணிக்கையைக் குறைப்பதற்குச் சமானம்-என்ற கருத்தினலோ என்னவோ?



## கொள்கை வளருது கோபுரம் போலே!

### செங்கற்பட்டு

18—3—56 ஞாயிறு மாலை 6 மணிக்கு, தர்க்கா திடலில் தோழியர் அருண்மொழி, முகவை ஆர். எஸ். பாண்டியன் —ஆகியோர் பேசுவர்.

### சென்னை (19-வது வட்டம்)

18—3—56 ஞாயிறு மாலை 6 மணிக்கு, கான்ரான்ஸ்மித் நகரில், [திரு. வி. க. திடல்] தோழர் டி. நடராஜன் அவர்கள் தலைமையில், பொதுச் செயலாளர் இரா. நெடுஞ்செழியன், தோழர்கள் இளம்பரிதி, சண்முகம், கதிர் சுப்ரமணியம் ஆகியோர் பேசுவர்.

★

### வ. ஆ. மாவட்ட தி. மு. கழகச் செயலாளர்களுக்கு:

பொதுச்செயலாளர் அறிக்கைப்படி, கழகச் செயலாளர்கள் உறுப்பினர்கள் சேர்க்கும் பணியில் தீவிரமாக ஈடுபட வேண்டுகிறேன்.

கீழ்க்கண்ட நிகழ்ச்சிகளின்படி, உறுப்பினர் சேர்க்கும் பணியைக் கவனிக்கவும், கழக வேலைகளைக் குறித்து செயலாளர்களுடன் ஆலோசிக்கவும் சுற்றுப் பயணம் செய்கிறேன். கழகச் செயலாளர்கள் சந்திக்க வேண்டுகிறேன்.

15-4-56: முல்லைக்கொம்மை, நிம்மியம்பேட், வெள்ளக் குட்டை ஆலங்காயம், ஓமகுப்பம், மிட்டூர், குரிசிலாபேட், அல்சந்திராபுரம், எக்லாஸ்புரம், வாணியம்பாடி.

16-4-56: கண்ணமங்கலம், ஆரணி [சுற்று வட்டம்], தெள்ளூர், சேலூர், வந்தவாசி, திருவத்திபுரம், போளூர் [சுற்று வட்டம்]

17-4-56: சந்தை புதுப்பாளையம், செங்கம் [சுற்று வட்டம்], நாடழகானந்தல், ஆலூர், கெங்குப்பேட், கீழ்பெண்ணாத்தூர், திருவண்ணாமலை [சுற்று வட்டம்], திருப்பத்தூர்.

18-4-56: ஆம்பூர், குடியாத்தம், பள்ளிக்கொண்டா, மருதவல்லிப்பாளையம், விருதம்பேட், கழிஞ்சூர், காங்கேயநல்லூர், காட்பாடி, வேலூர் [சுற்று வட்டம்].

19-4-56: மேல்விசாரம், ஆற்காடு [சுற்று வட்டம்], ராணிப்பேட்டை, வாலாஜா, காவேரிப்பாக்கம், அரக்கோணம்.

—முல்லை சத்தி.

★

### சென்னை--பெரம்பூரில் எஸ். ஆர். யூ. கூட்டம்

9-3-56 மாலை 7 மணிக்கு, ஏரி மைதானத்தில், பெரம்பூர் எஸ். ஆர். யூ. கிளையின் சார்பில், தோழர் டி. முருகவேள் தலைமையில் ஓர் பொதுக்கூட்டம் நடைபெற்றது. தோழர்கள் ஜி. பராங்குசம், இராகவானந்தம், துரைராஜ் ஆகியவர்கள், எஸ். ஆர். யூ-வின் நோக்கங்களையும், இரயில்வே நிர்வாகத்தின் போக்கைப் பற்றியும், தென்பகுதி இரயில்வே தொழிலாளர் சங்கம்—தென்பகுதி ஊழியர் சங்கம், இணைப்பு முறைகளைப் பற்றியும் விளக்கிப் பேசினர்.

ஆசிரியரும், அச்சிடுபவரும், வெளியிடுபவரும் மு. கருணாநிதி, 'முரசொலி' அச்சகம், 4/128, மவுண்ட்ரோடு, சென்னை-3

